# ஸ்ரீ ராமாநுஜன் 110.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை
ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 10 | ஹேவிளம்பிஸு மாசிமீ 1958ஸு பிப்ரவரிமீ | மலர் 2 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி பாசுரம்—2.

வீடுசெய்து மற்றெவையும் மிக்கபுகழ் நாரணன்தாள் *
நாடு நலத்தாலடைய நன்குரைக்கும் *—நீடுபுகழ்
வண்குருகூர் மாறனிந்த மாநிலத்தோர் தாம்வாழ *
பண்புடனே பாடியருள் பத்து.

— பதவுரை —

| | |
|---|---|
| நீடு புகழ் | உலகம் பரந்த புகழையுடையவராய் |
| வண் குருகூர் மாறன் | அழகிய திருக்குருகூரிலே அவதரித்தவரான நம்மாழ்வார் |
| இந்த மா நிலத்தோர் தாம் வாழ | இப்பெரிய பூமண்டலத்திலுள்ளார் உஜ்ஜீவிப்பதற்காக |
| பண்புடனே | பரம க்ருபையுடனே |
| பாடி அருள் பத்து | பாடியருளின * வீடுமின் முற்றவு மென்கிற பதிகமானது |
| | (என்ன தெரிவிக்கின்றதென்றால்) |
| நாடு | உலகத்தாரெல்லாரும் |
| மற்று எவையும் வீடு செய்து | பகவத் விஷயம் தவிர்ந்த மற்றெல்லாவற்றையும் விட்டொழிந்து |
| மிக்க புகழ் நாரணன் தாள் | மஹாயசஸ்வியான நாராயணனுடைய திருவடிகளை |
| நலத்தால் அடைய | பக்தியுடன் ஆச்ரயிக்குமாறு |
| நன்கு உரைக்கும் | நன்றாக உபதேசிப்பதாகும். |

## திருவாய்மொழியில் முதற்பத்து—இரண்டாம் பதிகமான * வீடுமின் முற்றத்தின் விளக்கம்.

மோக்ஷ சாஸ்த்ரமான வேதாந்த சாஸ்த்ரத்திற்கு முக்கியமான ப்ரமேயங்கள் இரண்டாம்; பரதத்துவம் இன்னதென்று நிஷ்கர்ஷித்தல் ஒன்று; அந்த பரதத்துவத்தையடைந்து உய்வதற்கு உபாயமான உபாஸனத்தை நிரூபித்தல் மற்றொன்று. ஸம்ஸ்க்ருதபாஷையிலமைந்த வேதாந்த சாஸ்த்ரம் ப்ரஹ்மஸூத்ர மெனப்படும் சாரீரகமீமாம்ஸை. அதில் இவ்விரண்டு ப்ரமேயங்களும் விரிவாக நிரூபிக்கப்பட்டுள்ளன.

* [illegible]
[illegible] *

என்கிற முன்னோர் முதுமொழியின்படி அந்த ஸம்ஸ்க்ருத வேதாந்த சாஸ்த்ரமே தமிழில் திருவாய்மொழியாக அவதரித்ததோ! என்ன நின்றமையால் இத்திருவாய்மொழிக்கும் அவையே முக்கியமான ப்ரமேயங்களாகும். இதில் முதலிரண்டு பதிகங்கள் திருவாய்மொழியாயிரத்திற்கும் ஸங்க்ரஹமாகையாலே * உயர்வறவுயர் நல மென்கிற முதற்பதிகமானது தத்வபர மென்றும் * வீடுமின் முற்றவு மென்கிற இவ்விரண்டாம் பதிகமானது உபாஸந பர மென்றும் நமது முன்னோர்களால் நிர்வஹிக்கப்படுகிறது. தத்வவிஷயமாகச்

சொல்லவேண்டுவதெல்லாம் கீழ்ப்பதிகத்தில் சொல்லிற்றென்றும், உபாஸந விஷயமாகச் சொல்லவேண்டுவது இப்பதிகத்தில் சொல்லப்படுகிறதென்றும் கூறுவர்.

புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விட்டு எம்பெருமானையே தஞ்சமென்று பற்றும்படி பரோபதேசம் செய்வது இப்பதிகம். ஸர்வஸங்கபரித்யாக பூர்வகமாக ஸ்ரீமந் நாராயணன் திருவடிகளிலே பக்தி செய்யும்படி உலகத்தாரை நோக்கி உபதேசிக்குமது இப்பதிகம். கீழ்ப்பதிகத்திலே ஆழ்வார்க்கு நிகழ்ந்த பரத்வாநுபவம் ஒரு பெரிய திருநாள் போலே யிருந்தது. இவர் இப்போது நெஞ்சொழிந்திருந்து பிறர்க்கு உபதேசிக்கத் தொடங்கிவிட்டாரே; இது எங்ஙனே? கீழே தாம் அநுபவித்த விஷயத்தை எல்லைகண்டு விட்டாரோ? அல்லது, தாம் அநுபவித்தது போதுமென்று விரக்தியடைந்து விட்டாரோ? என்னில்; இரண்டுஞ் சொல்ல முடியாது. * தனக்கும் தன் தன்மையறிவரியான் * என்கிறபடியே எம்பெருமான் தன்னாலும் எல்லைகாண முடியாததான அவ்விஷயம் இவர் தமக்கு எல்லை கண்டதாக எங்ஙனே ஆகும்? * கொள்ளமாளாவின்பவெள்ளம் * என்று, கொள்ளக் கொள்ள மாளாத இன்ப வெள்ளமாயன்றோ பகவத் விஷய மிருப்பது; ஆழ்வாருடைய ஆசையைப் பார்த்தாலோ * காதல் கடலின் மிகப் பெரிதால் * மண்திணி ஞாலமு மேழ்கடலும் நீள் விசும்பும் கழியப் பெரிதால் * சூழ்ந்து அதனிற் பெரிய என்னவா * என்று தாமே சொல்லிக் கொண்டபடியே மிகவும் பெருகியிரா நின்றது.

ஆக, அநுபவிக்கப்படும் பகவத்விஷயமும் சுருங்கமாட்டாததாய், அநுபவிக்கின்றவராகிய தம்முடைய காதலும் அளவுபடமாட்டாததாய் இருக்கையாலே அநுபவத்தில் நின்றும் இவர் மீள்வதற்கு ப்ரஸக்தியில்லை * எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழி தொறும் அப்பொழுதைக்கப் பொழுதென் னாராவமுதமே * என்கிறபடியே தெவிட்டாத அமுதமாயிருக்கின்ற பகவத் விஷயாநுபவத்தில் நின்றும் கையொழிந்து உபதேசத்திலே இறங்கினாரென்று கொள்ளலாகாது. தம் அநுபவிக்கும் பகவத் விஷயம் தனியே அநுபவிக்கக் கூடியதல்லாமையாலே பிறரோடு உசாவியே போது போக்கித் தரிக்கவேண்டியவரான தாம் அப்படிப்பட்ட அதிகாரிகளைப் பெறுதற்காக நாற்புறமும் கண்ணைச் செலுத்திப் பார்த்தார்; எல்லாரும் ஸம்ஸாரிகளாயிருந்தனர்; தாம் பகவத் விஷயத்திலூன்றியிருக்கிறாப் போலே அவர்கள் விஷயாந்தரங்களிலே ஊன்றியிருக்கக் கண்டாராழ்வார். அன்னவர்களின் அனர்த்தத்தைத் தவிர்க்காமல் நிற்கமாட்டிற்றிலர். அவர்களை எப்படி மீட்கலாமென்று பார்த்தார். "இவர்களோ சேதநராயிருக்கார்கள்; விஷயாந்தரங்களிலே வாசியறிந்து தீயவற்றைக் கழித்து நல்லவற்றைக் கைக்கொள்பவர்களாயிருந்தார்கள்; பகவத் விஷயத்தின் நன்மையையும் விஷயாந்தரங்களின் தீமையையும் நாம் எடுத்துக் காட்டினால் உண்மையை ஆராய்ந்து பார்த்து ஹேய விஷயங்களை விட்டு உபாதேய விஷயத்தைப் பற்றக் கூடுமே; ஆதலால் ஹேயோபாதேயங்களை உபதேசித்துப் பார்ப்போம்' என்று திருவுள்ளம்பற்றி, எம்பெருமானுடைய நன்மைகளையும், ஸம்ஸாரிகள் பற்றிக்கிடக்கிற விஷயாந்தரங்களின் அற்பத்தன்மை அநித்தியத்தன்மை முதலானவற்றையும் அருளிச்செய்யா நின்றுகொண்டு, விஷயாந்தரங்களில் நசையற்று பகவத் பக்தியைப் பண்ணுங்களென்று உபதேசிக்கிறார் இப்பதிகத்தில்.

ஒருவன் ஞானபக்தி விரக்திகளோடே ஆழ்வார் பக்கலிலே வந்து 'ஆழ்வீர்! அடியேனுக்கு ஹிதோபதேசம் செய்தருளவேணும்' என்று விநயத்தோடே கேட்க உபதேசிக்

கிறாரல்லரே ஆழ்வார். ஸம்ஸாரதாபம் எல்லார்க்கு மொத்திருக்கையாலே ருசி பிறந்தபோது யாரேனு மொருவர்க்குப் பலிக்கட்டுமென்று எல்லார்க்குமாக உபதேசித்து வைக்கிறு ரென்பது 'வீடுமின்' என்ற பன்மையினுற் போதரும். அஹங்கார மமகாரங்களாலே தூஷிக்கப் பட்டவற்றிலே சிலவற்றை வைத்துக்கொண்டு சிலவற்றை விடுவதென்பது கூடாதாதலால் முழுவதையும்விடச் சொல்லுகிறுர் முற்றவும் என்று. .... .... (*)

---

ஸ்ரீ:

# வடநாட்டுத் திருப்பதி யாத்திரையின் விரிவான அறிவிப்பு.

## (ஸ்ரீ காஞ்சி P. B. அண்ணங்கராசாரியர்.)

12—6—58 தேதியில் புறப்பட்டு வடநாட்டிலுள்ள ஸகல க்ஷேத்ர தீர்த்தங்களிலும் யாத்திரை செய்ய விருப்ப மென்பதைச் சென்ற மாதத்தில் வெளியிட்டிருந்தேன். அது கண்ட பலர் அந்த யாத்திரை சம்பந்தமான விவரங்களைப் பூர்த்தியாகத் தெரிந்து கொள்ள விரும்பி நமக்குக் கடிதங்கள் எழுதிக் கொண்டிருக்கிறுர்கள். எத்தனை நாள் யாத்திரை? எவ்வளவு செலவாகும்? ரைல் ஸௌகரியம் எப்படி? ஸாப்பாட்டு ஸௌகரியம் எப்படி? என்று இப்படிச் சில விஷயங்களை விளக்கமாகத் தெரிந்து கொள்ள விரும்புமவர்களுக்குத் தெளிவாகும்படி இது வெளியிடப்படுகிறது.

1. யாத்திரையின் காலம் 12—6–58 முதல் 9—9—58 வரை. சில ஆப்தர்கள் 20—6—58ல் புறப்படுவது சிலாக்கியமென்று தெரிவிக்கிறுர்கள். அதைப்பற்றி இன்னும் முடிவு செய்ததாகவில்லை. 20—6—58ல் புறப்பட்டால் 16—9—58 வரை யாத்திரையின் காலமென்று கொள்வது. எந்த காரணத்தாலும் 90 நாள்களுக்கு மேற்படாத யாத்திரை.

2. எந்தெந்த ஊரில் எத்தனைநாள் தங்குவதென்பதைப்பற்றி இதனடியில் காண்க.

| (சென்னையிலிருந்து புறப்பாடு.) | நாள் | | நாள் |
|---|---|---|---|
| பத்ராசலம் .... | 2 | டில்லி மாநகர் .... | 3 |
| ஸிம்ஹாசலம் .... | 1 | மதுரா, ப்ருந்தாவனம், கோகுலம், கோவர்த்தனம் .... | 5 |
| ஸ்ரீகூர்மம் .... | 2 | ஆக்ரா .... | 1 |
| ஸ்ரீ ஜகன்னதம்—புரீ .... | 2 | ஜயபூர் .... | 2 |
| கல்கட்டா .... | 3 | அஜ்மீர், புஷ்கரம் .... | 3 |
| கயா .... | 3 | நாதத்வாரா .... | 2 |
| காசீ .... | 3 | உஜ்ஜயினி (அவந்திகாபுரி) .... | 2 |
| பிரயாகை .... | 2 | ஸித்தபூர், அஹமதாபாத், டாகோர் த்வாரகை, கோமதீத்வாரகை, பேடீ த்வாரகை, போர்பந்தர் (குசேல பட்டணம்) ப்ரபாஸதீர்த்தம். .... | 10 |
| சித்ரகூடம் .... | 3 | பாம்பே நகர் .... | 3 |
| அயோத்யை .... | 3 | நாஸிக்பஞ்சவடி .... | 2 |
| கான்பூர் .... | 1 | பூனு .... | 1 |
| லக்னே .... | 1 | பண்டரிபூர் .... | 1 |
| நைமிசாரணியம் .... | 1 | | |
| ஹரித்வாரம், ஹ்ருஷீகேசம், தேவப்ரயாகம், பதரிகாச்ரமம் .... | 20 | | |
| குருக்ஷேத்ரம் .... | 1 | | |

ஆக மொத்தம் (83) எண்பத்து மூன்று நாளாகிறது. ரைல் பயணம் பெரும்பாலும் இரவில் நடக்குமாதலால் பிரயாண நாட்களும் சேர்ந்து 90 நாட்களுக்கு மேற்படாது.

3. எவ்வளவு செலவாகுமென்பதுபற்றித் தெரிவிக்கலாகிறது. ரைல்வே கம்பெனியாரோடு ஸம்பாஷணை நடந்து கொண்டிருக்கிறது. முன்பு 1955 ஆண்டில் யாத்திரை செய்தபோது 72 பேர்களுக்குத் தனி போகி வண்டி ஏற்பாடு செய்துகொள்ளப்பட்டது. அது வெகு ஸௌகரியமாயிருந்தது. அதற்கு ஏறக்குறைய பதினாலாயிரம் ரூபாய் ரைல்வே கம்பெனியார்க்குச் செலுத்த நேர்ந்தது. இப்போது ரைல் சார்ஜுகள் வெகுவாக ஏறியிருப்பதால் அதிகமான செலவேயாகும். தனி போகி வாங்கிக் கொள்ளாமல் 500 மைல்களுக்கு மொத்தமான டிக்கெட்டு வாங்கிக்கொண்டு ஆங்காங்கு ரிஸர்வேஷன் செய்து கொடுக்கும்படி கேட்பதாக இப்போதைய ஆலோசனை. அவரவர்களின் ஸௌகரியப்படி முதல் வகுப்பிலோ, இரண்டாம் வகுப்பிலோ, மூன்றாம் வகுப்பிலோ பயணம் செய்ய டிக்கெட் முன்னாடியே வாங்கிக் கொள்ளவேண்டியதாகிறது. மூன்றாம் வகுப்புக்கு 150—175 ரூ. ஆகிறது. இரண்டாம் வகுப்புக்கு 250 ரூ. ஆகிறது. முதல் வகுப்புக்கு 500.

4. ஆங்காங்கு ஸ்டேஷன்களில் இறங்கி ஜாகைபோய்ச் சேருவதற்கும் மறுபடியும் ஜாகையிலிருந்து ஸ்டேஷன் வந்து சேருவதற்கும் வண்டி வாடகை தனிப்பட்டது. அது 40 ரூபாயிலிருந்து 50 ரூ. வரை ஆகும். 3, 4 பேர்கள் சேர்ந்து ஒரு வண்டி வைத்துக் கொள்ளலாமாதலால் சிறிது குறைவாகவும் செலவு ஆகலாம். பதரிகாச்ரம யாத்திரைச் செலவு தனிப்பட்டது. அது 50 ரூ. ஆகலாம். கயாச்ராத்தச் செலவும் தனிப்பட்டது.

5. ஸாப்பாட்டுச் செலவு விஷயம்:— போஜன விஷயத்தில் அவரவர்கள் ஸொந்தமாகவே செலவு செய்து கொள்வது நலம். அனேகமாக நான்கு ஜாதியாரும் இந்த யாத்திரையில் கலந்து கொள்ள நேருமாதலால் அவரவர்கள் தம் தம் ஸௌகரியப்படி போஜன வஸதிகளை வைத்துக் கொள்ளலாம். ஆனால், நம்மோடு கலந்து கொண்டு நம்மையே நம்பி நம்முடைய ஆதரவில் யாத்திரை செய்ய விரும்பி வருபவர்களுக்கு முக்கியமாக நாம் செய்து கொடுக்கக் கூடிய ஸௌகரியம் போஜன விஷயத்திலே யாதலால் இந்த பணிவை நம்மிடத்திலேயே ஒப்படைக்க விரும்புமவர்களுக்கு நாம் ஏற்றுக் கொண்டு செய்யக் கடமைப் பட்டிருக்கிறோம். இந்த யாத்திரையில் மொத்தம் எத்தனை பேர்கள் கலந்து கொள்வார்களென்பது போகப் போகத்தான் தெரியும். எல்லாருக்குமாக நாலைந்து சமையற்காரர்களை ஏற்பாடு செய்து கொண்டு புறப்படுவோம். இவர்களுடைய ரைல் சார்ஜும் சம்பளமும் யாத்திரிகர்களெல்லாரையும் சேரும். எப்படியும் காபி பலஹாரங்கள் மட்டும் அவரவர்களின் ஸொந்த பொறுப்பிலேயே தனிப்பட நடைபெற வேண்டியதாகும். இரண்டு வேளை போஜனத்திற்கு மட்டுமே நம்மால் ஸௌகரியம் ஏற்படுத்திக் கொடுக்கமுடியும். சில விடங்களில் ஸமய ஸந்தர்ப்பங்களை யொட்டி இரவு போஜனத்திற்கு அவகாசம் நேராமற்போனால் அதற்காக மனஸ்தாபப்படக் கூடாது. வேற்றுமை பாவனையுள்ளவர்கள் இந்த யாத்திரையில் கலந்து கொள்ளவே கூடாதென்பது முக்கியமான அறிவிப்பு.

நாம் பல தடவை யாத்திரை செய்து பேரின்ப வெள்ளம் அநுபவித்ததனால், யாத்திரையில் விருப்பமுடைய அன்பர்களும், தகுந்த துணையில்லாமல் தனியே யாத்திரை செய்ய முடியாதவர்களும் நம்மோடு கலந்து வந்து அதிக சிரமமில்லாமல் க்ஷேத்ர தீர்த்த ஸேவையின் பத்தை யநுபவிக்கட்டும் என்கிற இந்த வொரு எண்ணங்கொண்டே நாம் நமது யாத்திரைகளில் அன்பர்களுக்கு ஸஹயோக மளிப்பது. வருமவர்கள் வழியில் நேரும் ஸுக துக்கங்களில் மிகவு மொத்த மனப்பான்மையை யுடையவர்களாயிருக்கவேண்டு மென்பது

முக்கியம். அப்படிப்பட்டவர்களையே நாம் ஆதரவுடன் வரவேற்பது. ஸாப்பாட்டுச் செலவு நபர் ஒருவர்க்கு **150** ரூபாயாகுமென்று வைத்துக் கொள்வது.

## — முடிவான அறிவிப்பு —

நிகழும் மார்ச்சு மாத முடிவுக்குள் நாம் ரைல்வே கம்பெனியாருக்கு இத்தனை நபர்களென்பதைத் தெரிவித்தாக வேண்டி யிருக்கிறது. ஆகவே இந்த யாத்திரையில் சேர விருப்பமுள்ளவர்கள் கூடிய சீக்கிரமாகவே நமக்குத் தெரிவித்துக் கொள்வதுடன் ரைல்வே கட்டணத்திற்கு அட்வான்ஸாக (50) ஐம்பது ரூபாயும் நமது விலாசத்திற்கு அனுப்ப வேண்டும். எந்த வகுப்பு டிக்கெட்டு தேவை யென்பதையும் மறவாமல் எழுதவேண்டும். இன்னமும் ஏதாவது விவரங்கள் தெரிந்து கொள்ள வேண்டியிருந்தால் ரிப்ளை தபால் எழுத வேண்டியது.

இப்படிக்கு,

**1—3—58.** P. B. **அண்ணங்கராசாரியார்,**

தென்னண்டை மாடவீதி, சின்ன காஞ்சீபுரம்.

---

## திருவரங்கம் பெரிய கோயிலில் பெரியாரிருவரின் பரமபத ப்ராப்தி.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி (நாற்பத்தேழாவது பட்டத்தில் அபிஷிக்தரா யெழுந்தருளி யிருந்த) ஸ்ரீரங்க நாராயண ஜீயர் ஸ்வாமிகள் திருநாடலங்கரித்த துக்கம் மறைவதற்குள் (22—2—58) ல் ஸ்ரீ. உ. வே. வித்வத்வரேண்யரான ஸ்ரீ கோவிந்தாசார்ய ஸ்வாமிகள் பரமபதத்திற் கெழுந்தருளினது அத்யந்த சோசநீயம். இந்த ஸ்வாமியின் ஜ்ஞாநாநுஷ்டாநங்கள் அநந்ய ஸாமாந்யமானவை. ஸ்ரீரங்க ஸ்ரீயே மறைந்துவிட்ட தென்றால் மிகையாகாது. இந்த மஹாசார்யருடைய ஸ்தானத்தைப் பூர்த்தி செய்யவல்லாரில்லை.

---

### ஸ்ரீராமாநுஜன் சந்தா செலுத்தியவர்கள்

29 ஸ்ரீ. V. ருக்மாங்கதன், மதராஸ்.
30 ,, G. அய்யாஸாமி நாயுடு, ,,
31 ,, P. S. ஸ்ரீநிவாஸன், பெரம்பூர், ,,
32 ,, M. R. ராகவஸ்வாமி அய்யங்கார், B. A., B. L., (அட்வொகேட்) பரமக்குடி.
33 ,, M. கிருஷ்ணகுமார், மண்டபம்.
34 ,, K. M. ராமாநுஜய்யங்கார், பெரியாறு ப்ராஜக்ட்டு, (மதுரை ஜில்லா.)
35 ,, Rao Sahib S. Raghavayyangar, T. Nagar.

---

ஸ்ரீ:

# புதிதாக வெளியிடத் தொடங்கிய நாலாயிர திவ்யப்பிரபந்தப் பொழிப்புரையைப் பற்றின

# அறிவிப்பு.

---

நம்முடைய திவ்யார்த்த தீபிகை யுரையோடு கூடிய நாலாயிர திவ்யப் பிரபந்தம் 62/- ரூ. விலையுள்ளதாக விருப்பதால் பொருள் ஸௌகரிய மில்லாதவர்கள் அந்த திவ்யார்த்த தீபிகை யுரையை வாங்கி வாசித்து இன்பம் நுகர முடியாமலிருப்பதால் 20 ரூபாய்க்கு மேற்படாத விலையில் சுருக்கமான வுரை யொன்று பதிப்பிக்கத் தொடங்கி அதினுடைய மாதிரி ஸஞ்சிகையும் வெளியிட்டிருந்தோம். 15—2—58 தேதிக்குள் முன்பணம் செலுத்து கிறவர்களுக்கு மட்டும் இந்த நாலாயிரவுரை 15 ரூபாய் விலையில் கிடைக்கு மென்றும் வெளியிட்டிருந்தோம். முப்பது நபர்கள் மட்டுமே முன்பணம் செலுத்தியுள்ளார்கள்.

இஃது இங்ஙனமிருக்க அச்சுக்காகிதத்தின் (Printing Paper) விலை திடீரென்று ஏறிவிட்டது. இன்னமும் ஏறப்போகிறதென்கிறார்கள். இந்த நிலைமையில் நம்முடைய நோக்கம் வெற்றி பெறுவதற்கு அவகாச மில்லாமலிருக்கிறது. இதுவரையில் முதலாயிரத்தில் 600 பாட்டுக்களுக்கும், பெரிய திருமொழியாயிரத்தில் 400 பாட்டுக்களுக்கும், திருவாய் மொழி யாயிரத்தில் 400 பாட்டுக்களுக்கும், இயற்பாவில் ஸ்வல்ப பாகத்திற்குமே இப் புதிய வுரை அச்சாகி யிருக்கிறது. அச்சுத்தாள் விலை குறையுங்காலத்தை எதிர்பார்த்து, தற்காலம் இந்த வேலையை நிறுத்திவைக்க நினைத்து விட்டோம். 15 ரூபாய் முன்பணம் செலுத்தி யுள்ளவர்களுக்கு மட்டும் மிச்சம் பகுதிகளுக்கு நமது தீபிகை யுரையைச்சேர்த்துப் பூர்த்தி யாகவே அனுப்பிவிடப்போகிறோம். 25—3—58 தேதிக்குள் ஷெ நாலாயிரவுரை அவரவர் களுக்கு ரைல்வே பார்ஸல் மூலம் கிடைக்கும்படி செய்வோம். தவறாமல் கிடைத்துவிடும். இதில் நமக்கு மிகவும் நஷ்ட மேற்படுகின்றதெனினும் வாக்குத் தவறக் கூடாதாதலால் இவ்வண்ணம் செய்ய முடிவுசெய்தோம். தொடங்கின பதிப்பு முடிவுபெற்றே தீருமென்பது திண்ணம்.

இனிமேல் ஏப்ரல்மாத முடிவுக்குள்ளாக முப்பது ரூ. செலுத்துகிறவர்களுக்கும் இவ் வண்ணமாக உரைப்புத்தகங்கள் அனுப்பிவைப்போம். முழுவதும் திவ்யார்த்த தீபிகை யுரையே வேணுமென்பவர்களுக்கும் தற்காலம் ஒரு ஸௌகரியம் செய்து தருவோம். அதாவது, நாளது ஏப்ரல்மாத முடிவுக்குள் 40 ரூ. விலைக்கு நாலாயிரத்திற்கும் விரிவான வுரைப் புத்தகங்கள் தருவோம். மொத்த விலையில் 22 ரூ. குறைக்கப்பட்டதென்றுணர்க. இந்த உதவி 1—5—58 தேதி வரைக்குமே.

இங்ஙனம்,

5—3—58

P. B. அண்ணங்கராசாரியர்,
திவ்யப்ரபந்தவுரை யாசிரியர்,
காஞ்சீபுரம்.

ஸ்ரீ:

# மதுரோபந்யாஸமாலை

( ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரிய ரெழுதிய உபந்யாஸங்கள். )

## 1. "பெருஞ்செல்வம் நெருப்பாக"

**(திருவாய்மொழி 4—9—4)**

தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையில் "தவத்துளார் தம்மிலல்லேன் தனம் படைத்தாரிலல்லேன்" என்றொரு பாசுரம் பாடியுள்ளார். 'யான் ஒரு தவமும் இயற்றினேனல்லேன்' என்று முன்னம் கூறினது தகும். உடனே, தனமும்யான் சம்பாதிக்கவில்லை யென்று மிக்க மனக்குறையுடன் கூறுகின்றாரே* இது தகுமா? *கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம் நெருப்பாக, என்று நம்மாழ்வாரருளிச் செய்கிறார். அர்த்தகாமங்களை வெறுத்துத் தள்ளி ஆழ்வார்கள் கோஷ்டியிலே சேர்ந்த பின்பும் "தனம் படைத்தாரில்லலேன்" என்று கூறினால் இவர்க்கு வைராக்யமில்லை யென்றுதானே சொல்லவேணும்— என்று சிலர் சங்கிப்பதுண்டு. இதைப் பற்றித் தெளிவு பிறப்பிக்க வேண்டியது அவசியமாகிறது. தருமம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்று புருஷார்த்தங்கள் நான்காகச் சொல்லப்படுகின்றன சாஸ்த்ரங்களில். *மன்னுமறம் பொருளின்பம் வீடென்றுலகில் நன்னெறி மேம்பட்டன நான்கன்றே* என்பது பெரிய திருமடல். *சேமநல்வீடும் பொருளும் தருமமும் சீரிய நற்காமமுமென்றிவை நான்கென்பர்*என்பது இராமாநுச நூற்றந்தாதி. தர்மார்த்த காமமோக்ஷங்கள் நான்கும் புருஷார்த்தங்களே. தர்மம் மோக்ஷம் என்னு மிவ்விரண்டைப்பற்றி யார்க்கும் விசாரமிராது. அர்த்தம் காமம் என்னு மிவை புருஷார்த்த மென்றால் இதைப் பற்றியே விசாரம் பெரிது முண்டாகக் கூடும். ஒரு விசாரமும் வேண்டா. தருமத்தைச் சொன்னவுடனே அர்த்தம் சொல்லப்பட்டிருக்கின்றது. மோக்ஷத்திற்கு முந்துற காமம் சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் தர்மோபயோகியான அர்த்தம் [த்ரவ்யம்] உத்தேச்ய மென்றும், மோக்ஷோபயோகியான காமம் உத்தேச்யமென்றும் தேறும்.

காமத்தைப்பற்றிச் சுருக்கமாகச் சொல்லிவிட்டு அர்த்தத்தைப்பற்றிச் சிறிது விரிவாகச் சொல்ல விரும்புகிறோம். காமமாவது ஆசை. ஆசை த்யாஜ்யமெனினும் எல்லாவிதமான ஆசையும் த்யாஜ்யமாகாது. அப்ராப்த விஷயங்களில் ஆசையே த்யாஜ்யமாகும். ப்ராப்த விஷயங்களில் ஆசை பரமோத்தேச்யமாகும். ஸ்ரீ வைகுண்டகத்யத்தில்

"कदाऽहं भगवन्तं नारायणं........ इति भगवत्परिचर्यायाम् आशां वर्धयित्वा"

என்று ஸ்வாமி யருளிச் செய்கிறார். இவ்வாசையை க்ஷணந்தோறும் அபிவிருத்தி செய்துகொண்டே யிருக்கவேணும். இல்லையாகில் மோக்ஷம் ரஸிக்கமாட்டாது. பசியில்லாதவனுக்கு போஜனம் ரஸியாதாப்போலே இவ்வாசை யில்லாதவர்க்கு மோக்ஷம் ரஸிக்கமாட்டாதாகையாலே இதுதரன் காமமெனப்பட்டு, புருஷார்த்தமெனவும் பட்டது.

இனி அர்த்தத்தைப் பற்றிப் பேசுகிறோம். அர்த்தமாவது தனம். தனத்தை துர்விநியோகப் படுத்தி அநர்த்தத்தை விளைத்துக்கொள்பவர்கள் பல

ருளர். பகவதாலயங்களை இடிக்கவும், பாகவதர்களை வதை செய்யவும் பொரு ளீட்டுவாரும் பொருள் செலவு செய்வாரும் பலருளர். அவ்வழிகளிலே உபயோ கப்படுகிற பொருள் த்யாஜ்யமேயாகும்.

" जितबाह्यजिनादिमणिप्रतिमा अपि वैदिकयन्निव रङ्गपुरे। मणिमण्डपवप्रगणान् विदधे परकाल कविः "

என்று பட்டரருளிச் செய்தபடி திருமங்கையாழ்வார் கையில் கிடைத்த அளவு கடந்த பொருள் பகவத் கைங்கரியத்திற்கு விநியோகப்பட்டது. அப்படியே பாக வத ததீயாராதநாதிகளுக்கும் அபரிமிதமாக விநியோகப்பட்டது. "नरपति परिक्लृप्तं शुल्कमादातुकामः" என்றும் "வேண்டிய வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்" என்றும் சொல்லுகிறபடியே பெரியாழ்வார் பாண்டிய ராஜஸதஸ்ஸில் பெற்ற அபரிமிதமான தனராசியைக்கொண்டு ஸ்ரீவில்லிபுத்தூரில் கோபுரப்ராகாராதி நிர்மாணம் செய்வித்தருளினதாக சரித்திரம் வாசிக்கிறோம்.

உபநிஷத்துக்களிலும், ஜாநச்ருதி முதலானவர்கள் ரைக்வர் முதலான ஆசார்யர்களுக்கு அபரிமிதமாகப் பொருள் ஸமர்ப்பித்து ப்ரஹ்மவித்யைகளை அதிகரித்ததாக ஓதப்பட்டிருக்கிறது. * आचार्याय प्रियं धनमाहृत्य प्रजातन्तुं मा व्यवच्छेत्सीः * என்று தைத்திரீயோபநிஷத்தும் ஓதுகிறது. ஆக, ஸத்விஷயங்களில் விநியோ கப் படக்கூடியதான தனம் த்யாஜ்யமன்று என்றும் உபாதேயமே யென்றும் விளங்கிற்று. தொண்டரடிப் பொடியாழ்வார், தமக்கு முன்னே தோன்றினவ ராய் தம்மைப்போலே புஷ்பகைங்கர்யத்திலே யீடுபட்டிருந்தவரான பெரியாழ் வார் கிழியறுத்துக் கொணர்ந்த தனராசிகளைக் கொண்டு செய்த தொண்டுகளை நன்றாக அறிந்தவர். திருமங்கையாழ்வார் இவர்க்குப் பிற்பட்டவரானாலும் அவ ருடைய சரித்திரங்களையும் இவர் ஒருவாறு கேள்விப்பட்டிருக்கக் கூடும். அவ ருடைய தொண்டுகளையும் அறிந்திருக்கக்கூடும். அவ்விதமான தொண்டுகள் செய்வதற்கும் தனம் இன்றியமையாததாதலால் அக்கைங்கர்ய ருசியாலே "**தனம் படைத்தாரிலல்லேன்**" என்று குறையுற்றுச் சொல்லிக் கொண்டதில் தகுதி யின்மை யொன்றுமில்லை. இந்த ப்ரஸங்கத்தில் மற்றொரு விசாரமும் செய்ய ப்ராப்தமாகிறது.

கைங்கரியம் செய்வதற்குப் பல வுபகரணங்கள் உண்டு. மநஸா செய்வது மாநஸிக கைங்கரியமாகும். வாக்கினால் செய்வது [அதாவது ஸ்துதிகளைச் சொல்லி யேத்துவது] வாசிக கைங்கரியமாகும். சரீரத்தை ச்ரமப் படுத்திச் செய்யுமது காயிக கைங்கர்யமாகும். பொருள்களைச் செலவழித்துச் செய்யுமது ஆர்த்திக கைங்கர்யமாகும். மாநஸிக வாசிககைங்கர்யங்களை விட் டிட்டு, காயிக ஆர்த்திக கைங்கரியங்களைப் பற்றிச் சிறிது விசாரணை செய்வோம். நாம் சரீரத்தினால் செய்யும் கைங்கரியங்களினால் எம்பெருமானுக்குத் திருவுள் ளம் உகக்குமா? தனத்தினால் செய்யும் கைங்கரியங்களினால் திருவுள்ளம் உகக் குமா? என்று ஆராய்வோமாகில், தனத்தினால் செய்யும் கைங்கர்யங்களினால் அவன் திருவுள்ளம் உகவாது; தேஹத்தை ச்ரமப்படுத்திச் செய்யும் கைங்கரி யங்களினால்தான் திருவுள்ளம் மிகவுகக்கும் என்று ஸித்தாந்தம் செய்ய முடியும். எதனாலென்னில், கேண்மின். நமக்கு சரீரத்தில் அதிக ச்ரத்தையா? தனத்தில் அதிகச்ரத்தையா? என்று பார்ப்போம். குற்றம் செய்தவர்களுக்கு ராஜ தண் டனை விதிக்கப்படுகிறது. "ஆயிரம் ரூபாய் அபராதம்; அது செலுத்தத் தவறி னால் ஒருமாதம் கடினக்காவல்" என்று தண்டனை விதிக்கப்படுவதாக வைத்துக் கொள்வோம். இப்படி விதிக்கும்போது பரமதரித்ரரான யாரோ சிலர் சிறை யிருக்க முன் வருகிறார்களே தவிர, சிறிது துட்டு காசு உள்ளவர்கள் பணத்தை

அவலீலையாகச் செலுத்திவிட்டு தேஹத்தைக் காப்பாற்றிக் கொள்ளப் பார்க்கிறார்கள். செய்த குற்றத்திற்கு 'ஒருவாரம் கடினக்காவல்' என்று சிக்ஷை விதிக்கப்பட்டால் அதை மாற்றிக் கொள்ளப் பதினாயிரம் ரூபாயும் செலவு செய்யத் துணிகிறார்கள். இவற்றால் நாம் என்ன அறிகிறோம்? ஜனங்கள் த்ரவ்யத்திற்காட்டிலும் தேஹத்தில் அளவுகடந்த ப்ரீதி வைத்திருக்கிறார்கள் என்பதை ஸ்பஷ்டமாகக் காண்கிறோம். அப்படி ப்ரேமத்துடன் காக்கப்படுகிற தேஹத்தை ச்ரமப் படுத்திச் செய்யும் கைங்கர்யமே யல்லவா உண்மையில் எம்பெருமானுக்கு அந்தரங்கத்தில் உகப்பை விளைவிக்கும்.

திருவாய்மொழியில் *சாமாறும் கெடுமாறும்* (4-9-2) என்கிற பாட்டின் ஈடுமுப்பத்தாறாயிரப்படி வியாக்யானத்தில் ஆச்சரியமான கதையொன்று எழுதப்பட்டிருக்கின்றது; அதாவது—ஒருவன் ராஜத்ரோஹக் குற்றத்திற்காகத் தண்டனையடைந்தானும்; என்ன தண்டனையென்னில், கையையும் காலையும் தறித்து விட்டார்களாம்; இரண்டொருநாளில் உயிர்போகப்போகிறது. ஒரு ஆப்தர் அவனை விசாரிக்கச் சென்று 'ஐயோ இப்படியாயிற்றே!' என்று வருந்தினாராம். அதற்கு அவன் சொன்ன வார்த்தை;—"ஆயிரம் தா, ஐந்நூறு தா என்னாதே இவ்வளவோடே போயிற்றே" என்றானும். ஆயிரம் ரூபாயோ ஐந்நூறு ரூபாயோ அபராதம் செலுத்தும்படி ச்ரமப்படுத்தாமல் கையையும் காலையும் வெட்டினதற்கு இவன் பரமஸந்தோஷமடைந்ததாக இக்கதையினால் ஏற்படுகிறது. இப்படிப்பட்ட க்ருபணர்கள் சரீரத்திலே ச்ரத்தை கொள்ளாமல் தனத்திலே ச்ரத்தை கொண்டிருப்பர்களாகில் அன்னவர்கள் தனத்தினால் கைங்கரியம் செய்தே எம்பெருமானையுகப்பிக்கக் கடமைப்பட்டவர்களாவர். இப்படிப்பட்ட அதிகாரிகள் மிகச் சிலரே தேறுவர்கள். பெரும்பாலும் தனத்தை அவலீலையாகச் செலவுசெய்து தேஹத்தை நிழலிலே வைத்துக் காப்பாற்றுபவர்களாகவே தேறுவர்கள். அப்படிப்பட்டவர்கள் காயிககைங்கரியம் செய்தால்தான் எம்பெருமான் திருவுள்ளமுகக்கும். தொண்டரடிப்பொடியாழ்வார் தம்முடைய திருமேனியை ச்ரமப்படுத்திக் கைங்கரியம் செய்தவர் என்பது இவருடைய சரிதையில் ப்ரஸித்தமானது. அப்படியிருக்க இவர் "தனம்படைத்தாரிலல்லேன்" என்று குறைப்பட வேண்டாவே யென்று சங்கிக்க நேரும்.

இதற்குச் சொல்லுகிறோம்; தேஹ ச்ரமத்தினால் கைங்கரியம் செய்வதானது அக்காலத்தளவிலே நிற்குமத்தனை. தோட்டம் சமைத்துப் பூஞ்செடிகளை வளர்ப்பதோ, பகவத் ஸந்நிதிகளில் திருவிளக்கெரிக்கை, சாமரம் பணிமாறுகை, ஸ்ரீபாதம் தாங்குகை முதலான கைங்கரியங்கள் செய்வதோ இவையெல்லாம் அக்காலத்தோடு ஸமாப்தம். அபரிமிதமான பொருட்செலவு செய்து பண்ணப்படுகிற கைங்கரியங்களானவை திவ்யாபரண பீதாம்பர வாஹந ஸ்வர்ணரஜத பாத்ராதி ரூபேணவும் கோபுரப்ராகாரமண்டப தர்மசாலாதி ரூபேணவும் நீடூழி காலம் நிலைநின்று விளங்குமன்றோ.

சென்ற நூற்றாண்டில் **வேங்கடாத்ரி** யென்றொரு பாகவதோத்தமர் இருந்தார். இற்றைக்கும் இவருடைய திருநாமத்தைக் கேள்விப்படாதாரில்லை. இவர் மஹாத்மாவென்று உலகங்கொண்டாட நிற்பவர். பரமவிரக்தரென்று புகழ் பெற்றவர். இவருடைய கைங்கரியமான ரத்னகிரீடங்கள் மற்றும் சில திவ்யாபரணங்கள் கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான திவ்யதேசங்களிலே நாளைக்கும் பக்தஜந நயநாஹ்லாதகங்களாய் விளங்குகின்றன. "தேவப்பெருமாள் இன்று வேங்கடாத்ரி கொண்டை சாத்திக் கொள்ளுகிறார்" என்றால் பக்த ஜனங்களின் குதூஹலம் வாசாமகோசரம். இக்கைங்கரியங்களுக்காக இம்

மஹாத்மர் பொருளீட்டின்போது "பத்து ரூபாய்க்குக் குறைவாக என்றைக்குக் கிடைக்கிறதோ, அன்றைக்கு சுத்தோபவாஸமிருந்து விடுவ"தென்று விரதம் கொண்டிருந்தாராம். அவ்வாறாகத் தனம்படைத்து அவர்செய்த கைங்கரியம் கல்பாந்தமாக விளங்கியன்றோ பக்தர்களை மகிழ்விக்கக் கூடியதாக வுள்ளது.

"என்னாவிலின் கவி யாவொருவர்க்கும் கொடுக்கிலேன்" "வாய்கொண்டு மானிடம் பாடவந்த கவியேனல்லேன்" என்று நம்மாழ்வார் கொண்டிருந்த விரதம் திருமங்கையாழ்வார்க்குமுண்டு. ஆனால் அவ்வாழ்வார் தம்முடைய பெரிய திருமொழியில் பல பதிகங்களில் மானிடர்களைக் கொண்டாடிப்பாடுகிறார். எந்த மானிடர்களைப் பாடுகிறாரென்னில்; விசேஷமான பொருட்செலவு செய்து திவ்யதேசங்களில் சாச்வத கைங்கர்யங்களைச் செய்த மஹாநுபாவர்களையே பாடியிருக்கிறார். "மன்னுதண்பொழிலும் வாவியும் மதிளும் மாடமாளிகையும் மண்டபமும், தென்னன் தொண்டையர்கோன் செய்த நன்மயிலைத் திருவல்லிக்கேணி" என்றும், "மன்னவன் தொண்டையர் கோன் வணங்கும் நீண்முடிமாலை வயிர மேகன் தன்வலி தன்புகழ் சூழ்ந்த கச்சியட்டபுயகரத்து" என்றும், "பல்லவன் வில்லவனென்றுலகிற் பலராய்ப் பல வேந்தர்வணங்கு கழற் பல்லவன் மல்லை யர்கோன்பணிந்த பரமேச்சுர விண்ணகரம்" என்றும், "இருக்கிலங்கு திரு மொழிவா யெண்டோளீசற்கு எழில் மாட மெழுபது செய்துலகமாண்ட திருக் குலத்து வளச்சோழன்சேர்ந்த கோயில் திருநறையூர் மணிமாடம்" என்றும் அருளிச்செய்துள்ள பாசுரங்கள் காண்க.

தனத்திற்கு இரண்டுவகையான உபயோகமேயுள்ளது. தானும் தமர் களுமாக வயிறாரவுண்டு பல்வகைப்பட்ட போகங்களையுமநுபவிப்பது ஒன்று. ஸத்பாத்ர பூத பகவத் பாகவத விஷயங்களிலே விநியோகிப்பது மற்றொன்று. தாங்கள் வயிறார வுண்பதற்குப் பர்யாப்தமான பொருள் இல்லாதவர்கள் பகவத் பாகவத விஷயங்களிலே கிஞ்சித்கரிக்க ப்ரஸக்தியில்லை. புஷ்கலமான செல்வம் படைத்தவர்கள் கீழே சொன்ன இருவகை யுபயோகங்களையும் நடத்தி வருவார் இக்காலத்திலும் இல்லாமற் போகவில்லை; ஆங்காங்கு விரளமாகவுள்ளார்கள். தாமும் தமர்களுமாக வயிறாரவுண்டு பலவகைப்பட்ட போகங்களையு மநுபவித்து ஸத்பாத்ர விநியோகத்தில் கண்செலுத்தாதேயிருப் பார் பலருளர். அவர்களைப்பற்றியும் நமக்கு விசாரமில்லை. தாமுமுண்ணாதே தமர்களுக்குமிடாதே ஸத்பாத்ர விநியோகத்தைக் கனவிலும் நினையாதே, வட்டிக்கு வட்டி வசூலித்துத் தனரக்ஷக நிதிகளில் பல லக்ஷக்கணக்கிலே பணத் தைச் சேமித்து வைத்து இதுவே ஆனந்தமாகவிருப்பார் எங்கும் நிறைந்துள் ளார்கள். இவர்கள் 'தனிகர்' என்கிற பெயரொன்றுக்கே ஆசைப்படுவர்கள்.

"நாம் பிறக்கும்போது கையிலே ஒருகாசு கொண்டு வந்திலோம்; இறக் கும்போது அரைநாணையும் அறுத்துக் கொண்டு நம்மைப் போகவிடுகிறார்கள். ஏதோ இடையில் சில தாண்டவங்கள் நடக்கின்றன. எம்பெருமான் நம்மைக் கூடியமட்டிலும் நல்ல ஸ்திதியில் வைத்திருக்கிறான்; நாமும் நமரும் உண்டு மிகுந்ததை யதாசக்தி ஸத்பாத்ரங்களிலே விநியோகித்துக் களிப்போம்" என்று நினைப்பவர்கள் மிகச்சிலரே. செல்வமில்லாதவர்களுக்கு இப்படிப்பட்ட குதூ ஹலங்கள் மிகுகின்றன. செல்வமுள்ளவர்களுக்கு

"दृढतरनिबद्धमुष्टेः कोशनिषण्णस्य सहजमलिनस्य । कृपणस्य कृपाणस्य च केवलमाकारतो भेदः ॥"

என்று கவியியற்றும்படியான கார்ப்பண்யம் வளர்கின்றது. கூரத்தாழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் "भूयानहो परिकरः प्रतिकूलपक्षे— பூயாநஹோ பரிகர:

ப்ரதிகூலபக்ஷே" என்று அத்புதமான வொரு ஸூக்தியருளிச் செய்கிறார். அஃது உலகத்தில் பல விஷயங்களுக்கு ஒத்து வருகின்றது. பகவத் ஸங்கல்பத்திலேயே குறை கூறுவதுபோல் அந்த ஸ்ரீஸூக்தி காண்கிறது. ஸங்கல்ப ஸூர்யோதயத்தில்

"सर्वत: करवीरादीत् सूते मागरमेखला । मृतसञ्जीवनी यत्र मृग्यमाणदशां गता ॥"

என்று கூறின ஆசிரியர்க்கும் இதுவே திருவுள்ளம் போலும். தனத்தைக் கொடுத்து மனத்தை இல்லை செய்கிறான்; மனத்தைக் கொடுத்து தனத்தை இல்லை செய்கிறான். எவன்? *நாட்டைப் படையென்றயன் முதலாத்தந்த நளிர்மா மலருந்தி வீட்டைப்பண்ணி விளையாடும் விமலனான அவனே. ....

---

## 2. பண்டிதர்களும் பரமபக்தர்களும்

உலகில் காணும் மஹான்களை நாம் இரண்டு வகுப்பில் சேர்த்துப் பேசுகின்றோம். சிலரை மஹாஜ்ஞானிகள் [மஹாபண்டிதர்கள்] என்று வழங்குகிறோம். சிலரை மஹாபக்தர்களென்று புகழ்கிறோம். பாண்டித்யமும் பரமபக்தியும் ஒரே நபரிடத்தில் ஒன்று சேர்ந்திருக்க முடியாத தன்மைகளல்ல. இருளும் ஒளியும் ஒன்று சேர்ந்திருக்கமாட்டாதவை யென்பது போல இந்த ஜ்ஞானபக்திகளும் ஒன்று சேர்ந்திருக்கமாட்டாதவை யென்பாரில்லை. நம்முடைய பூர்வாசாரியர்களும் மற்றும் பல பெரியார்களும் ஜ்ஞான பக்தி விரக்தி நிதிகளாயிருந்தவர்களே. ஆனால் இக்காலத்தில் இவற்றை நாம் ஏகாச்ரயத்தில் காண்பது அரிதேயாகின்றது. ஞானமுள்ளவிடத்தில் பக்தியையும் பக்தியுள்ளவிடத்தில் ஞானத்தையும் பெரும்பாலும் காணமுடிகிறதில்லை.

உலகில் ஜ்ஞாதாக்களுக்கு கௌரவம் அதிகமா? பக்திமான்களுக்கு கௌரவம் அதிகமா? என்று நாம் பார்த்தால், உண்மையில் பக்திமான்களுக்குத்தான் கௌரவம் அதிகமாக இருக்கவேண்டும்; ஆனால் ஜ்ஞாதாக்களுக்கே அதிகமான கௌரவம் ஆங்காங்கு செய்யக் காண்கிறோம். இதற்குக் காரணமென்னவென்றால், இவர்கள் போலிபக்தர்களா? உண்மை பக்தர்களா? என்று யதார்த்தமாகக் கண்டுபிடிக்க முடிகிறதில்லை. வித்வான்களென்கிற வகுப்பிலும் உண்மைவித்வான்கள் போலிவித்வான்களென்கிற வேற்றுமையிருந்தாலும் வாயிலிருந்து வெளிவரும் பேச்சுக்களைக்கொண்டு இன்னார் உண்மைப்பண்டிதர், இன்னார் போலிப்பண்டிதர் என்று தெரிந்துகொள்ள முடிகிறது. பக்திமான்களை இங்ஙனே தெரிந்துகொள்வது முடியாத காரியமாக இருக்கின்றது.

பக்தனென்று வெளிக்குக் காட்டிக்கொள்ளக் கூடிய வேஷபூஷணங்களைத் தரித்துக் கொள்வது அனைவர்க்கு மெளிதாகின்றது. உள்கனிந்த உண்மையான பக்தி பிறப்பது மிகவும் அரிதாயிருக்கின்றது. பன்னிரண்டு திருமண் காப்புகளை அழகாயும் ப்ரகாசமாயும் தரித்துத் திருமணித் தாவடம் திருப்பவித்திரம் முதலியன பூண்டு கொண்டு பாகவதோத்தம னென்று உலகமடங்கலும் உகந்துகொள்ளும் படியான வேஷத்தோடு வெளிவருவதில் விசேஷ ச்ரமமில்லை. இதுபோலவே முடிமுதல் அடிவரையில் திருநீறுபூசி ருத்ராக்ஷமாலையணிந்து சிவபக்தசிகாமணியாக விளங்குவதிலும் தாமதமேற்படாது. ஆனால் மனத்தில் அழுந்திக்கிடக்கும் பாபவாஸனைகளை அகற்றிப் பரமேச்வரனிடத்தில் உண்மையான அன்பு கொண்டு தன்மயபாவத்தையடைவதொன்றே. மிகமிகக் கஷ்டஸாத்யமும் கால்விளம்பத்தில் அருமையாய்ப் பெறக்கூடியதுமாம்.

பக்தியின் வெளிவேஷங்களை வஹித்துக் கொள்வதனல் மாத்திரம் ஒருவன் உண்மையான பக்தனுக ஆய்விடமாட்டான். அநாதிகால ஸஞ்சிதமான பாபங்கள் கழிந்து துர்வாஸனைகள் தொலைந்து பரமபுருஷ விஷயத்தில் பரவசமான பக்தி ஏற்பட்டுத் தன்மயமாய்ப் போனல்தான் பக்தனுக முடியுமென்பதை ஒவ்வொருவரும் மனத்தில் அழுத்தவேண்டும். பக்தியின் வெளிச்சின்னங்கள் அவசியமில்லையென்று நாம் சொல்லுகின்றிலோம். அவை மிகவும் அவசியமே யென்பதைப்பற்றிச் சில வியாஸங்களை விரிவாக எழுதி வெளியிட்டு மிருக்கின்ருேம். அந்த வெளிச்சின்னங்களைத் தரித்துக்கொள்வதனல் மாத்திரம் த்ருப்திபடைந்து விடாமல் உண்மையான பக்திக்கு முயற்சி செய்யவேண்டும்.

பெருப் பெருத்த தருமகாரியங்களைச் செய்கிறவனே பக்தன் என்று சிலர் நினைக்கக்கூடும். குளம் வெட்டுவிப்பது, சத்திரம் சாவடிகள் கட்டுவிப்பது. தண்ணீர்ப்பந்தல் வைப்பது இவைபோன்ற பல வெளிப்பகட்டான காரியங்கள் செய்கிறவன் பக்தன் எனச் சிலர் நினைக்கிருர்கள். உண்மையுரைக்குங்கால் இக்காரியங்கள் ஒரு விதத்திற் சிறந்தவைகளேயாகிலும் இவ்வகைக் காரியங்கள் செய்வதனுலேயே ஒருவன் பக்தனென்னும் வ்யபதேசத்திற்குப் பூர்ணபாத்திரமாய் விடமாட்டான். இவ்விதமான பெருங்காரியங்கள் செய்ய அனைவர்க்கும் இயலாது. யாரோ சிலர்தான் இவற்றைச் செய்யக்கூடும். அங்ஙனம் செய்பவர்களை விசேஷ தனிகர்களென்றும் விசாலமனம் படைத்தவர்களென்றும சொல்லலாமே யல்லது பக்தர்களென்று சொல்லுவதற்கில்லை.

ஆனல் உண்மையான பக்தனுடைய அடையாளமென்ன வென்று கேள்வி பிறக்கலாம். உண்மையான பக்தனைக்காண்பது அரிதேயாகிலும் கண்டுபிடிப்பது கஷ்டமல்ல. எம்பெருமான்பக்கலில் சுயநன்மை கருதாத அன்புடைய பக்தனிடத்தில் ஒவ்வொரு ஸமயத்திலும் நாம் விசேஷத்தைக் காணலாம். எந்த காலத்திலும் எந்த தேசத்திலும் எந்த நிலைமையிலும் பக்தன் பக்தனுகவே யிருப்பான். நீராடுவது உண்பது முதலிய காரியங்களைச் செய்யும் போதும், பந்து மித்திரர்களோடு பழகும்போதும், பிணியால் வருந்தும் போதும், பலவகைக் கஷ்ட நஷ்டங்கள் ஏற்படும் போதும், விசேஷமான லாபங்கள் கிடைக்கும்போதும் பக்தன் பக்தனுகவே யிருப்பான்; எல்லாக் கால தேச நிலைமைகளிலும் ஸாதாரணமான நிலைமை மாருமலே அவனிருப்பான். எவ்விதமான கொந்தளிப்பும் அவனிடத்திற் காண முடியாது. எப்பொழுதும் இயற்கையான ஸந்தோஷத்தோடு சாந்தமூர்த்தியாக இருப்பான். எவ்விதமான மாறுபாடும் அவனிடத்திற் காணமுடியாது. மஹத்தான ஆபத்துக்களிலும் தன்னிலைமையிலிருந்து பிறழமாட்டான். பொறுமையும் தயையும் சாந்தியும் பரிசுத்தியும் இன்னும் இது போன்ற பல நற்குணங்களும் அவனிடத்திற் பதிந்துகிடக்கும். பக்தியின் நிலைமை முதிரமுதிர இக்குணங்கள் வளர்ந்து கொண்டே வரும்.

எவன் தனது கடமைகளைக் குறையறச் செய்கிருனே, மஹத்தான ஆபத்துக்கள் மிடைந்தபோதும் அக்கடமைகளைச் செய்வதில் மயிரிழையும் பிசகுகிருனில்லையோ, தான் பிறர் சுற்றத்தார் மற்றையோர் மித்திரன் சத்துரு என்கிற பேதபாவனையின்றி அனைவரிடத்தும் ஒருபடியாக நடந்து கொள்ளுகிருனே, உள்ளும் புறமுமொத்த சுத்தனுய் நேரான நெறியில் நிலைகிற்கிருனே, எம்பெருமானிடத்தில் அகங்குழைந்த அன்புடையவனே அவனே உண்மையான பக்தனுவான். பாலையும் நீரையும் பகுத்திடும் அன்னம் போல் அத்தகைய பக்தர்களை அநாயாஸமாகக் கண்டறிவர் பெரியோர்.

ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் மூன்ருவது அம்சத்தில் ஏழாமத்யாயத்தில் யமகிங்கரஸம்வாதம் மஹாபக்தர்களின் லக்ஷணத்தை யமன் தனது கிங்கரர்களுக்கு

மிக விரிவாகக் கூறுவதாய் நிபந்திக்கப்பட்டிருக்கின்றது. அங்குள்ள பல ச்லோகங்களுள் ஸாரமான ஒரு ச்லோகம் மாத்திரமே ஈண்டெடுத்துக் காட்டப்படுகின்றது; *ந சலதி நிஜவர்ணதர்மதோ யஸ் ஸமமதிராத்ம ஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே, ந ஹரதி ந ச ஹந்தி கிஞ்சிதுச்சைஸ் ஸிதமநஸம் தமவேஹி விஷ்ணுபக்தம்.* என்பது கண்டபாடம் செய்யத் தக்க ச்லோகரத்னம். இதன் பொருள்தான் கீழே விவரித்தது.

---

## 3. ஆசாரியர்கள் மேகத்தை யொத்தவர்கள்

[பத்து ப்ரகாரங்களாலே இவ்வொப்புமை நிர்வஹிக்கப்படுகின்றது.]

1. மேகமானது உப்புக்கடலிலுள்ள க்ஷாரமான ஜலத்தையும் தான் முகந்து மிக மதுரமாக்கிப் பெய்கின்றது. அதுபோல ஆசாரியர், நால்வேதக் கடலிலுள்ளனவாய் மந்தமதிகளுக்கு துரவகாஹங்களாய் அபோக்யங்களான அர்த்தங்களைத் தங்களுடைய திருநாவீறு கொண்டு பரமபோக்யமாக்கி உபகரிப்பர்.

2. மேகமானது "உயிரளிப்பான் மாகங்களெல்லாம் திரிந்து" (திருவிருத்தம்) என்றருளிச் செய்தபடியே லோகரக்ஷணார்த்தமாகப் பெய்யவேண்டு மிடங்களிற் சென்று பெய்வது போல ஆசாரியர் "எண்டிசையும் பேர்த்தகரநான்குடையான் பேரோதிப் பேதைகாள்! தீர்த்தகரராமின் திரிந்து" என்கிற பூதத்தாழ்வாருடைய நியமனப்படியே "ஸ்ரீரங்கம் கரிசைலமஞ்ஜநகிரிம்... ..ஸாலக்ராம கிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம்முநி:" என்னும்படியாக ஸகல திவ்ய தேசங்களிலும் ஸகல க்ஷேத்ரங்களிலுமெழுந்தருளி ஆத்மோஜ்ஜீவனார்த்தமாக அர்த்த விசேஷங்களைப் பொழிவர்.

3. மேகமானது மழைபெய்து பள்ளமான விடங்களையும் நிரப்புவது போல ஆசாரியரும் ஸதுபதேச வ்ருஷ்டிகளைச் செய்து நீசர்களையும் உத்துங்கர்களாக்குவர்.

4. மேகமானது எப்போதும் வர்ஷியாது; காலவிசேஷங்களிலே வர்ஷிக்கும். இங்ஙனே ஆசாரியரும் சில ஸமயவிசேஷங்களைக் குறிக்கொண்டு ஸதுபதேசவர்ஷங்களைச் செய்வர்.

5. மேகமானது ப்ராப்த காலங்களில் பெய்யாவிடில் உலகில் பலவகைப் பீடைகள் உண்டாகின்றன. அதுபோல ஆசாரியரும் ஸமயங்களில் ஸதுபதேசங்களைச் செய்தருளாவிடில், தேஹாத்மப்ரமம் ஸ்வஸ்வாதந்த்ர்ய ப்ரமம் அந்ய சேஷத்வ ப்ரமம் ஸ்வரக்ஷணே ஸ்வாந்வய யோக்யதாப்ரமம் முதலான பல பீடைகள் தோன்றும்.

6. மேகம் எவ்வளவு வர்ஷித்தாலும் த்ருப்தியடைவது மில்லை; கைம்மாறு கருதுவதுமில்லை. அதுபோலவே ஆசாரியரும் கைம்மாறு கருதாமல் எவ்வளவு உபதேசித்தும் த்ருப்தியடையாமலே யிருப்பர்.

7. மேகம் சிலகாலங்களில் சில நீர்த்துளிகளைப் பெய்து ஓய்கிறது; மற்றொருகால், போதும்போது மென்னும்படியாக அபரிமிதமாய் வர்ஷிக்கிறது. இங்ஙனமே ஆசாரியரும் சிலஸமயம் மந்த்ரோபதேசமென்று சிஷ்யர் செவியிலே சில அக்ஷரங்களைச் சொல்லி நிற்பர்; மற்றொருகால் [காலக்ஷேபக்ரந்த ப்ரவசனம் செய்யுமிடத்து] ச்ருதி ஸ்ம்ருதீதிஹாஸபுராண உபய வேதாந்த ரஹஸ்ய ஸாரார்த்தங்களை அபரிமிதமாக வர்ஷித்து வியப்புறச் செய்வர்.

8. மேகம் வீதிகளிலே வர்ஷித்து ஜலத்தை நிஷ்ப்பலமாக்குகிறது; சிப்பிகளிற் பெய்து முத்துக்களை யுண்டாக்கி ரத்ன பூஷணங்களுக்கு உதவுகிறது. இப்

படியே ஆசாரியரால் சில வ்யக்திகளிடத்தில் உபதேசிக்கப்படும் அர்த்தங்கள் அநவ்தானத்தினாலும் விஸ்மரணத்தினாலும் அப்ரயோஜனமாகின்றன. சில மேதாவிகள் பக்கலிலோ வென்னில் விசேஷமான புஷ்டியையடைந்து ஸ்ரீவசநபூஷணம், உபதேச ரத்தினமாலை என்னும் பெயர்களால் ஆத்மாலங்கார ஹேதுக்களாகின்றன.

9. மேகம் பெய்த நீர் நதிகளிலும் தடாகங்களிலும் கிணறுகளிலும் சென்று சேர்ந்து ஸர்வோபஜீவ்யமாகின்றது; வேறிடங்களிற் சேர்ந்து ஒருவர்க்கும் கொள்ளத்தகாததாக ஆகின்றது. அதுபோலவே ஆசார்யர் ஸத்பாத்ரங்களில் வர்ஷிக்கும் அர்த்தவிசேஷங்கள் ஆசார்ய பரம்பரையாய் க்ரஹித்து அநுபவிக்கத்தக்கதாயும், அபாத்ரங்களில் தந்த அர்த்தங்கள் பழுக்கக்காய்ச்சின இரும்பிலே விட்ட தண்ணீர் போல் அஸத் கல்பங்களாயும் ஆகின்றன.

10. மேகமானது "எத்தனையும் வான் மறந்த காலத்தும் பைங்கூழ்கள், மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும்" (பெருமாள் திருமொழி) என்கிறபடியே பயிர், சாதகபக்ஷி முதலிய அநந்யகதிகளால் எதிர்பார்க்கப்பட்டிருந்து அவற்றுக்கு உபகாரகமாயும், "நீர்காலத்து எருக்கிலம்பழவிலைபோல் வீழ்வேனை"( நாச்சியார் திருமொழி) என்கிறபடியே எருக்கஞ் செடிகளிற் பெய்து நஷ்டத்தை விளைப்பதாயும் ஆகிறது. அதுபோல, ஆசார்யதிவ்ய ஸ்ரீஸூக்திகளும் அநந்யகதிகளால் குதூஹலத்தோடு எதிர்பார்க்கப்பட்டு உபயோகங்கொள்ளப் படுவனவாய், பிறரிடத்திலே பெருகி "சாறுவாகமத நீறுசெய்து சமணச்செடிக்கனல் கொளுத்தியே சாக்கியக்கடலை வற்றுவித்து மிகு சாங்கியக்கிரி முறித்திட" (ஆர்த்திப் பிரபந்தம்) என்கிறபடியே அநர்த்த ஹேதுக்களாய் முடியும். இங்ஙனே மற்றும் பலவகையான உவமைப்பொருத்தங்கள் காணலாம். ... ... ... ... *

---

## 4. தேசிக ஸூக்தியில் ஓர் ஐதிஹ்யம்

யதிராஜஸப்ததியில் (38) *குத்ருஷ்டி குஹநாமுகே நிபதத: பரப்ரஹ்மண: கரக்ரஹவிசக்ஷணோ ஜயதி லக்ஷ்மணோயம் முநி:* என்கிற ச்லோகவிஷயமான ஓர் ஐதிஹ்யம் கேண்மின். அப்பயதீக்ஷிதர் காஞ்சீபுரத்தில் தும்பை வனம் என்னுமிடத்தில் வாஸம்செய்து கொண்டிருக்கையில் உஞ்சவ்ருத்திபண்ணுகிற வொரு ஸ்ரீவைஷ்ணவர் யதிராஜஸப்ததி சொல்லிக்கொண்டு அவ்வீதியில் வருவராம். ஒரு நாள் அவருடைய க்ருஹத்தின் வாசலில் இந்த ச்லோகம் சொல்லுகையில் "கரக்ரஹ விசக்ஷணோ ஜயதி லக்ஷ்மணோயம் முநி:" என்றதைக் கேட்டதும், "ஐயங்காரே இப்படி வாருங்கள்; 'கரக்ரஹ விசக்ஷண:' என்று தேசிகர் ஸாதித்திருக்கமாட்டார்; அது ப்ராஸத்திற்குச் சேராது; "கசக்ரஹ விசக்ஷண:" என்றே அவர் ஸாதித்திருப்பர். இதுதான் ப்ராஸத்திற்குப் பொருந்தும், பொருளுக்கும் சேரும். தண்ணீரில் அமிழ்ந்தவனைத் தலைமயிரிலே பிடித்துத் தூக்குவது எங்குங் கண்டதாகையாலே 'குத்ருஷ்டி குஹநாமுகே நிபதத: பரப்ரஹ்மண:" என்றதற்குச் சேர "கசக்ரஹ விசக்ஷண:" என்று தானிருக்கத்தகும்; இனிமேல் இப்படியே சொல்லுங்கள்" என்று திருத்திக் கொடுத்தாராம். உஞ்சவ்ருத்தி ஸ்வாமி விசேஷஜ்ஞரல்லாமையாலே மஹாபண்டிதரென்று ப்ரஸித்தரான தீக்ஷிதருடைய வார்த்தையில் கௌரவாதிசயத்தாலே அவ்விதமாகவே பாடத்தைத் திருத்திக் கொண்டு "கசக்ரஹ விசக்ஷண:" என்றே சொல்லிவந்தார். அதைச் சில ஸ்ரீவைஷ்ணவவித்வான்கள் கேட்டு 'என்ன ஸ்வாமிந்! புதிய பாடமாயிருக்கிறதே, இது எங்கே கேட்டது?' என்றார்கள். அதற்கு இவர் தீக்ஷிதருடைய வார்த்தைகளைச் சொல்லி அவர் பெறுவித்த திருத்தம் என்றார்; அதற்கு அந்த வித்வான்கள் சொன்னதாவது—தீக்ஷிதர் வித்வானேயாகிலும் அரஸிகர்; ப்ராஸத்திற்கு ஆசைப்

பட்டு அர்த்தஸ்வாரஸ்யத்தை இழக்கலாகாது. தண்ணீரினுள் அமிழ்ந்தவனுடைய தலைமயிர் அகப்படுவதற்கு முன்னே அவனுடைய கைகள் தான் அகப்படும்: என்னைத் தூக்கிப் போடுவாருண்டோவென்று அவன் இருகைகளையும் உயரவெடுத்திருப்பன். *நிபதிதஸ்ய*என்னுதே*நிபதத:* என்று வர்த்தமாந நிர்தேச மிருப்பதனுல் கைதான் எளிதாக எட்டும். 'கரக்ரஹ' என்கிற பாடந்தான் மிகப்பொருத்தமானது என்று. இதைப் பிறகு தீக்ஷிதர் கேள்விப்பட்டு 'அர்த்த ஸ்வாரஸ்யம் கண்டறிவதற்கு ஸ்ரீ வைஷ்ணவர்களே இட்டுப் பிறந்தவர்கள்' என்று கொண்டாடி 'கரக்ரஹ' என்பதுதான் யுக்தமான பாடமென்று தலைதுலுக்கிச் சென்றாராம்.

## 5. ஸ்ரீராமாயணமும் நம் ஆசாரியர்களும்.

ஸ்ரீராமாயணம் வைதிகமதஸ்தர்கள் யாவர்க்குமே ஆதரணீயமாய் ப்ரவசனத்தில் வந்திருக்கின்றது. ஸ்மார்த்தர் மாத்வர் முதலான யாவருமே இதிஹாஸ ச்ரேஷ்டமான இந்த மஹாக்ரந்தத்தில் வாய் வைத்து இதைக்கொண்டு போது போக்கி வருகின்றார்களெனினும் ஸ்ரீவைஷ்ணவ மஹாசார்யர்கள் இந்த மஹாக்ரந்தத்தில் அவகாஹித்து ஆச்சர்யமான அர்த்தவிசேஷங்களை அருளிச்செய்தபடியால்தான் இந்த க்ரந்தத்திற்குத் தனிச் சிறப்பு உண்டாயிற்றென்று நிர்மத்ஸரர்களான பலரும் சொல்லிப் போருவர்கள்.

ஸ்ரீ ராமாயணத்தில் பங்க்தியின் மேல் கிடைக்கிற சப்தார்த்தத்தைவிட அதிகமான அர்த்த விசேஷங்களை சாஸ்த்ரஸரணிக்குச் சேர உபந்யஸிப்பவர்கள் எந்த மதஸ்தர்களானாலும் ஆகுக; அவ்வர்த்த விசேஷங்கள் பரம போக்யமாக இருக்குமேயானல் அவை பட்டர் நம்பிள்ளை பெரியவாச்சான் பிள்ளை போல்வாரான ஸ்ரீவைஷ்ணவாசாரியர்கள் வழியாக வந்தவைகளாக இருக்குமேயல்லது வேறு விதமாக இருக்க ஔசித்யமில்லை யென்று மதாந்தரஸ்தர்களும் பரவசர்களாய் ஸதஸ்ஸுகளில் சொல்லக் கேட்டிருக்கிறோம்.

ப்ரஹ்மஸ்ரீ பரித்தியூர் கிருஷ்ண சாஸ்திரிகள் என்கிற மஹான் பரகதியடைந்து முப்பத்தைந்து வருஷங்களே யாயிருக்கும். ஸ்மார்த்தரான இம்மஹான் சிறந்த சாஸ்த்ரஜ்ஞராயிருந்ததோடுகூட ஸ்ரீ ராமாயணத்தை அற்புதமாக ப்ரவசனம் செய்வதில் மிக ப்ரஸித்தி பெற்றிருந்தார். சென்னையிலும் மற்றும் பல மஹா நகரங்களிலும் அவருடைய ப்ரவசநங்களை யநுபவித்து ஆனந்தித்தவர்கள் இற்றைக்கும் பலருளர். அவர் ஒவ்வொருநாளும் ப்ரவசநமத்யே சொல்லுவராம்— பெரியவாச்சான் பிள்ளை யென்கிற மஹான் அவதரியாதிருந்தால் ஸ்ரீமத் ராமாயணம் வெறும் கடைவீதிப் புராணமாகத் தான் இருந்திருக்கும் என்று.

ப்ரஹ்மஸ்ரீ பண்டித லக்ஷ்மணாசார் [மத்வ ஸம்ப்ரதாயஸ்தர்] சென்னைமா நகரில் ப்ரவசனம் செய்து வந்தபோது ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயஸ்தர்கள் தாம் அவரிடம் அதிகமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்களாம். அவர், தமக்குப் பெரியவாச்சான் பிள்ளை கனவில் காட்சி தந்து ஸகலார்த்தங்களையும் கரதலாமலகமாகக் காட்டிக் கொடுத்ததாய்ச் சொல்லி ப்ரவசனந்தோறும் பெரியவாச்சான்பிள்ளை தனியனை உரக்கச் சொல்லிவிட்டே ஆரம்பம் செய்வர் என்பது ப்ரஸித்தம்.

இக்காலத்தவர்கள் ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களின் வியாக்கியானங்களை ஆழ்ந்துபாராமலே ஸாஹஸமாகச் சிலவார்த்தைகள் சொல்லுவதோடு நில்லாமல் எழுதியும் வைக்கிறார்கள்; 'மூலகாரருடைய அபிப்ராயத்தில் இல்லாத அர்த்தங்களை ஏறிட்டுரைக்கிறார்கள்' என்று. வாஸ்தவமாய் மூலகாரர் நெஞ்சில் கொள்ளாத அர்த்தங்களைப் பெரியவாச்சான் பிள்ளை போல்வார் அருளிச் செய்கிறார்களென்பதை நாம் மறுக்கவேண்டிய அவசியமேயில்லை. 'ஏறிட்டுரைக்கிறார்கள்' என்பது

மாத்திரமே ஸாஹஸமான வார்த்தை. "जामाता वेत्ति नो पिता-ஜாமாதா வேத்தி நோ பிதா" என்பதை த்ருஷ்டாந்தமாகக் கொண்டு "व्याख्याता वेत्ति नो कवि :—வ்யாக்க்யாதா வேத்தி நோ கவி :" என்கிறார்களே, அது பொய்யன்று. ஸத்யமே. தனி ச்லோகம் முதலான திவ்யக்ரந்தங்களில் பெரியவாச்சான்பிள்ளை பணித்துள்ள பொருள்களெல்லாம் வான்மீகி பகவானுடைய உள்ளத்தில் உறைந்தவையே யென்று யாரும் ப்ரதிஜ்ஞை பண்ண முடியாது. ஆனால் மஹா வாக்மிகள் வாய் வைத்து விசேஷார்த்தங்களை வாரியிறைப்பதற்குப் பாங்காகச் சொல்தொடைகளை அமைத்த அதிசயம் வான்மீகி முனிவர்க்கே அஸாதாரணம். அவருடைய திருவாக்குக்கு ஒருவருடைய புத்திக்கு மெட்டாத அர்த்த விசேஷங்களை யருளிச் செய்த ஆசாரியர்களின் மேதையைப் பற்றிப் பேசவேணுமானால் "என் மதிக்கு விண்ணெல்லா முண்டோ விலை" என்ற திருமழிசைப் பிரான் பாசுரந்தான் எடுத்துரைக்கத்தக்கது. ஸ்ரீ ராமாயண அயோத்யா காண்டத்தில் (68—14.)

* सरांसि च सुफुल्लानि नदीश्च विमलोदकाः । निरीक्षमाणा जग्मुस्ते दूताः कार्यवशात् द्रुतम् ॥ *

* ஸராம்ஸி ச ஸுபுல்லாநி நதீச்ச விமலோதகா:, நிரீக்ஷமாணா ஜக்முஸ் தே தூதா: கார்யவசாத் த்ருதம் *

என்றொரு ச்லோக முள்ளது. தசரதசக்ரவர்த்தி துஞ்சின பின்பு பரதாழ்வானை மாதுல க்ருஹத்தில் நின்றும் அழைத்துக்கொண்டு வருவதற்காகப் புறப்பட்டுச் சென்ற தூதர்களின் செய்தியைச் சொல்லும் ச்லோகமிது. 'நல்ல மலர்களையுடைய பொய்கைகளையும் நிர்மலமான தீர்த்தத்தையுடைய நதிகளையும் பார்த்துக்கொண்டே அந்த தூதர்கள் கார்ய வசத்தாலே விரைந்து சென்றார்கள்' என்பது ச்லோகத்திற் கிடைக்கும் பொருள். மூலத்தில் நிரீக்ஷமாணா: ஜக்மு: என்று ஸ்பஷ்டமாக வுள்ளது பார்த்துக் கொண்டே போனார்கள் என்பதே இதன் பொருள். ஆனால் இதற்கு நம்பிள்ளை யருளிச் செய்யும் பொருள் திருவாய்மொழியீட்டில் (6-1-7ல்) விலக்ஷணமாக வுள்ளது. "நிரீக்ஷமாணா இத்யாதி—பாராதே போனார்களென்கை" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. இதைப் பார்க்கும் புல்லறிவாளர்கள் "நம்பிள்ளை அநியாயமாய் ஏமாந்து போனார்; பார்த்துக்கொண்டே போனார்களென்று எழுதவேண்டியிருக்க, பாராதே போனார்களென்று ஏதோ ப்ரமித்து எழுதிவிட்டார்" என்றே கை தட்டிப் பேசுவர்கள். இதை மஹாரஸிகர்கள் கண்டால் அந்தோ! இது என்ன மேதையின் மாண்பு! என்று உள்குழைந்து உருகுவர்கள்.

இங்கே சிறிது ஆராய்வோம்; *ஸராம்ஸி ச ஸுபுல்லாநி* இத்யாதி ச்லோகத்தை வான்மீகி பகவான் இங்கே எதற்காக எழுதினாரென்று பார்ப்போம். பரதாழ்வானை யழைத்துவரச் சென்ற தூதுவர்கள் கனவேகமாக ஓடிக் கொண்டிருக்கிறார்கள். வழியிலோ மிக ரமணீயங்களான ஸந்நிவேசங்கள் பல பல கிடக்கின்றன. அவற்றில் இவர்கள் கண் செலுத்தப் புக்கார்களாகில் ஓரடியும் பெயர்ந்து செல்ல முடியாது. வான்மீகிக்கு வழியினழகையும் வருணிக்க ஆசை. தூதுவர்கள் அவ்வழகில் கண் செலுத்தாதே விரைந்து சென்றபடியையும் சொல்லவேண்டியிருக்கிறது. ஆனால் அவர்கள் கண்ணை மூடிக்கொண்டு சென்றார்களல்லர். கண்ணைத் திறந்து கொண்டு தான் செல்கின்றனர். கண்ணோ அவ்வழகில் படிவதில்லை. இவ்வர்த்தத்தை யுட்கொண்டு "நிரீக்ஷமாணாஸ் தே ஜக்மு:" என்றார் கவிஸார்வபௌமர். அவரது உட்கருத்தைச் சிக்கனப் பிடித்து அற்புதமாக வருளிச் செய்யு மாற்றல் பெற்ற பேராசிரியர்கள் "பாராதே போனார்களென்கை" என்றருளிச் செய்தார்கள். வேறு எந்த வ்யாக்யாதாவும் இப்படி யெழுதக் கற்றிலர். 'பார்த்துக் கொண்டே போனார்கள்' என்று தான் பிறர் எழுதக் கடமைப் பட்டவர்கள். இதில் யாருடைய மேதை வியக்கத் தக்கதென்பதை ரஸிகர்கள் குறிக்கொள்ளவேணும். ... *

## 6. விசிஷ்டாத்வைத நுட்பம்

### — உலகவழக்கு நூல்வழக்கென்று இரண்டுண்டு —

உலகவழக்காவது லோக வ்யவஹாரம். நூல்வழக்காவது சாஸ்த்ர வ்யவஹாரம். உலகவழக்குத் தான் முதலில் தோன்றியது. பிறகுதான் சாஸ்த்ர வ்யவஹாரம் தோன்றியது. உலகமும் அநாதியாய் சாஸ்த்ரமும் அநாதியாயிருக்கும்போது சாஸ்த்ர வ்யவஹாரம் பிறகு தோன்றியதென்று எங்ஙனே சொல்லலாமென்னில்; நன்னூலில் "இலக்கியங் கண்டதற்கு இலக்கணமியம்பலின்" என்றொரு சூத்திரமுள்ளது. இதனால் இலக்கியம் முற்பட்டதென்றும் இலக்கணம் பிற்பட்டதென்றும் விளங்குகின்றது. ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரஜ்ஞர்களுங் கூட லக்ஷ்யம் முற்பட்டதென்றும் லக்ஷணம் பிற்பட்டதென்றும் கொள்கையுடையராகக் காணப்படுகிறார்கள். உண்மையில், கண்ட லக்ஷ்யங்களை சிக்ஷிப்பதற்காகத்தானே லக்ஷணசாஸ்த்ரம் தோன்றுகின்றது. ஆகவே இந்த முற்பாடு பிற்பாடுகளில் விவாதங்கொள்ள இடமில்லை. ஆனால், லக்ஷண சாஸ்த்ரம் பிற்பட்டதென்பார் அது தோன்றின் காலங்கண்டு கூறுகின்றாரல்லர். லக்ஷ்யம் தோன்றினதற்கும் அடி தெரியாது, லக்ஷணம் தோன்றினதற்கும் அடி தெரியாது. ஆயினும் ஒன்று முற்பட்டதென்றும் மற்றொன்று பிற்பட்டதென்றும் சொல்லப்படுகிறது. ஜீவாத்மாவுக்கு பகவத் ஸம்பந்தமும் ப்ரக்ருதி ஸம்பந்தமுமாகிய இரண்டும் அநாதியாயிருக்கச் செய்தேயும், பகவத் ஸம்பந்தந்தான் அநாதி யென்றும் ப்ரக்ருதி ஸம்பந்தம் வந்தேறி யென்றும் கூறப்படுகிறது. இதைப்பற்றி நம் ஆசாரியர்கள் எழுதுகையில், [ஆசார்யஹ்ருதய வியாக்கியானத்தில்]—

> "அசித் ஸம்பந்தம் வந்தேறியாய் கர்மோபாதிகமாகையாலே அநித்யமாயிருக்கும். பகவத் ஸம்பந்தம் அநாதியாய் நிருபாதிகமாகையாலே நித்யமாயிருக்கும். ஆனால் வந்தேறியானதை அநாதியென்பானென்னென்னில்; வந்தேறின காலத்துக்கு அடிதெரியாமையாலே அநாதியென்று ப்ரமாணங்கள்சொல்லுகையாலே"

என்றருளிச் செய்கிறார்கள். அந்த நியாயம் இங்குங் கொள்ளலாம். ஆக லோக வ்யவஹாரம் முற்பட்டதென்றும் சாஸ்த்ர வ்யவஹாரம் பிற்பட்டதென்றும் கொள்ளக் குறையில்லை.

இனி, லோக வ்யவஹாரங்கள் எப்படியிருக்கின்றன, சாஸ்த்ர வ்யவஹாரங்கள் எப்படியிருக்கின்றன என்பதைப் பற்றிச் சிறிது ஆராய்வோம். சப்தங்களுக்கு ஸப்த விபக்திகள் [ஏழு வேற்றுமைகள்] ஏற்பட்டிருக்கின்றன. நாம் வ்யவஹாரங்கள் செய்யும் போது நமது வாக்குகளில் இந்த விபக்திகள் கலசிக் கலசி வருகின்றன. ஒரே விபக்தியால் நாம் வ்யவஹரிப்பதில்லை, வ்யவஹரிக்கவும் முடியாது. பல விபக்திகளைக் கலந்தே நாம் வ்யவஹரிக்க வேண்டியதாகிறது. உதாரணமாகப் பார்க்கலாம்—"ஸ்ரீமந்நாராயணன் நம்போன்ற சேதநர்களைப் பரமக்ருபையினாலே ரக்ஷித்தருளும் பொருட்டுத் திருப்பாற் கடலினின்றும் வஸுதேவருடைய புதல்வராய் மதுரையிலே அவதரித்தருளினான்" என்கிறோம். இதில் வரிசையாக ஏழுவேற்றுமைகளும் வந்திருப்பதைக் காணலாம். நம்முடைய எல்லா வ்யவஹாரங்களும் இப்படி ஏழு வேற்றுமைகளையுங் கொண்டேயிருக்கு மென்கிற நியதியில்லை. அதமபக்ஷம் இரண்டு விபக்திகளையாவது கொண்டிருக்கும். 'நான் வந்தேன்' 'நான் போனேன்' என்னும் வியவஹாரங்களில் (நான்) என்கிற முதல் வேற்றுமை யொன்றுதானே காணப்படுகிறது, வேறு வேற்றுமை யில்லையே என்று நினைக்கலாகாது. இன்னவிடத்திற்குப் போனேன் என்றதாகவே தேறுமாதலால் வேறொரு விபக்தியும் சேர்ந்தேயிருப்பதாக அறிக.

'இராமன் யோக்யனே; கண்ணன் கள்வனே' என்று சொல்லுவோமானால், இராமனை நான் யோக்யனாகவே கருதுகின்றேன். கண்ணனை நான் கள்வனாகவே கருதுகின்றேன் என்றே அந்த வாக்கியங்கள் விரியுமாதலால் அங்கும் பல வேற்றுமைகள் உள்ளனவேயாம். ஆக இவ்வளவும் நாமெழுதியது பெரும்பான்மையைப் பற்ற. ஒரே விபக்தியினால் வ்யவஹாரம் செய்வது தவறன்று, அஸம்பாவிதமன்று. அப்படிப்பட்ட விடங்களில் என்ன தாற்பரியம் என்பதைப் பற்றியே நாம் ஆலோசிக்கவேணும். இந்த பிரமசாரி நெருப்புதான், இந்த மாணக்கன் சிங்கக்குட்டிதான், திருவடி தாமரைதான், திருமுகம் சந்திரன் தான்... என்றிப்படி பல்லாயிரம் வ்யவஹாரங்கள் செய்கிறோம். இவ்விடங்களில் கருத்தை ஊன்றி நோக்கவேணும்; பிரமசாரியும் நெருப்பும் ஒன்றாய்விட முடியாது; மாணக்கனும் சிங்கக் குட்டியும் ஒன்றாய்விட முடியாது. திருமுகமும் சந்திரனும் ஒன்றாய் விட முடியாது. ஆனால் ஒன்றுபோல ஏன் சொல்லுகிறோமென்னில், இரண்டுக்கும் அத்யந்த ஸாம்யமிருப்பதுபற்றிச் சொல்லுகிறோம்.

'மந்த்ரியே அரசன்' என்றும் சொல்லுகிறோம். மந்தரி அரசனாகமாட்டான், அரசன் மந்த்ரியாகமாட்டான். பின்னை ஏன் சொல்லுகிறோமென்னில், மந்த்ரி சொன்னபடியெல்லாம் அரசன் ஆடுகிறான் என்கிற கருத்தைக்கொண்டு சொல்லுகிறோம். இங்கு அத்யந்த விதேயத்வத்தில் நோக்கு. ஆக இவ்வளவும் லோக வ்யவஹாரங்களைப் பற்றிப் பேசினோம்; இனி சாஸ்த்ர வ்யவஹாரங்களிற் செல்வோம். சாஸ்த்ரவ்யவஹாரங்களும் லோகவ்யவஹாரங்களைப் போன்றேயிருக்கும். உலக வழக்குகளில் காணும் கருத்தே நூல் வழக்கிலும் காணலாகும். பல வேற்றுமைகளைக்கொண்ட வாக்கியங்களை உலகில் நாம் வ்யவஹரிப்பது போலவே சாஸ்த்ரங்களும் வ்யவஹரிக்கின்றன.

* स हि देवैरुदीर्णस्य रावणस्यवधार्थिभिः । अर्थितो मानुषे लोके जज्ञे विष्णुस्सनातनः ॥ *

என்கிற வொரு ஸ்ரீராமாயண ச்லோகத்தை யெடுத்துக் கொள்வோம். இதில் ப்ரதமை, த்ருதீயை, ஷஷ்டி, ஸப்தமி ஆகிற நான்கு விபக்திகள் கலந்திருக்கின்றன. உபநிஷத்து முதலிய எந்த சாஸ்த்ரத்திற் சென்றாலும் இங்ஙனே பல விபக்திகள் கொண்ட வாக்ய ராசிகளை நாம் காணலாம். இதைப்பற்றிச் சொல்ல வேண்டிய விஷயம் அதிகமாக ஒன்றுமில்லை. ஒரே விபக்தி கொண்ட வாக்யங்களும் சாஸ்த்ரங்களிற் பல காணப்படுகின்றன. *तदेवाग्निस्तद्वायुस्तत्सूर्यस्तदु चन्द्रमाः * என்கிற வோர் உபநிஷத் வாக்யத்தை யெடுத்துக் கொள்வோம்; அந்த ப்ரஹ்மந்தான் அக்நி. அந்த ப்ரஹ்மந்தான் வாயு; அந்த ப்ரஹமந்தான் ஸூர்யன்; அந்த ப்ரஹ்மந்தான் சந்திரன் என்று இந்த வாக்யத்தினால் சொல்லப்படுவதாக அறிகிறோம். ப்ரஹ்மத்திற் காட்டிலும் அக்நி வேறு. வாயு வேறு, ஸூர்யன் வேறு, சந்திரன் வேறு என்பதை நாம் ச்ருதிகளைக் கொண்டே நன்கு அறிகிறோம். *ததேவாக்நிஸ் தத் வாயு:* என்றோதின உபநிஷத்திலேயே * भीषाऽस्माद्वातः पवते । भीषोदेति सूर्यः । भीषाऽस्मादग्निश्चेन्द्रश्च * இத்யாதி வாக்யங்களையும் காண்கிறோம். பரம புருஷனுடைய கட்டளைக்கு உட்பட்டு அவனுக்கு அஞ்சி நடுங்கி வாயு தேவதை வீசுவதாகவும் ஸூர்யன் உதிப்பதாகவும்....இதில் வ்யக்தமாகச் சொல்லுகிறது. இப்படி பகவானுக்கு அஞ்சி நடுங்கிப் பணிவிடை செய்கிற கீழ்ப்பட்ட தேவதைகள் பகவான் தானேயாக இருக்கமுடியுமோ? ஒருகாலும் இருக்கமுடியாது. உண்மை இப்படியிருக்க, யதார்த்த வாதியான உபநிஷத்து *ததேவாக்நிஸ் தத் வாயுஸ் தத் ஸூர்யஸ் தது சந்த்ரமா:* என்றும் *இந்த்ரச் ச நாராயண: சந்த்ரச் ச நாராயண:*

என்றும் ஏன் சொல்லுகிறதென்று ஆராயவேணும். இதை நாம் நம்முடைய அல்ப புத்தியைக்கொண்டு ஆராயவேண்டா. வேதமே ஆராய்ந்து தெளிவு பிறப்பித்திருக்கின்றது. * नारायण एवेदं सर्वम् । यद्भूतं यच्च भव्यम् * என்பதாக ஓர் உபநிஷத் வாக்யம் ப்ரஸித்தமாக வுள்ளது. 'எல்லாப் பொருள்களும் நாராயணனே' எனப் படுகிறது இதனால்; இப்படிச் சொல்லுவதன் காரணத்தையும் அவ்விடத்திலேயே * अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायणः स्थितः * என்கிற வாக்யம் நன்கு விசதப் படுத்திவிட்டது. ஒவ்வொரு பொருளிலும் பரம புருஷன் வியாபித்திருப்பதனால் இந்த வ்யாப்யவ்யாபக பாவ ஸம்பந்தமடியாகவே அபேதம் சொல்லப்படுகிறதென்று தெளிவித்தபடி.

பரப்ரஹ்ம மொன்று தவிர வேறு பதார்த்தம் உண்மையில் எதுவுமே கிடையாதென்று கூறுகின்றவர்கள் அபேதத்தைச் சொல்லுகின்ற வேதவாக்யங்களை மாத்திரமே கண்டு அத்வைத கோலாஹலங்களை அபரிமிதமாகச் செய்கிறார்கள். லோக வ்யவஹார ரீதியில் தான் சாஸ்த்ர வ்யவஹாரங்களுமுள்ளன வென்பதை நன்றாக நெஞ்சிற் கொண்டு நோக்குமளவில் விசிஷ்டாத்வைதக் கொள்கை தான் பரிபூர்ணமான ஆதாரமுடையதென்று விளங்கும்.

மற்றொரு சிறு விஷயமும் கேண்மின்; * ब्रह्म वेद ब्रह्मैव भवति * என்றொரு வாக்யத்தைப் பற்றிக் கொண்டு ப்ரஹ்மத்தோடு ஐக்யமாய் விடுவதே மோக்ஷமென்கிறார்கள். ஐக்யமாவதே மோக்ஷமாகில் * विद्वान् पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति * என்று சாந்தோக்யோபநிஷத்தில் [பரமம் ஸாம்ய முபைதி என்று] சொல்லியிருக்கிறதே, ஸாம்ய மென்றால் என்ன? முகம் சந்திரனோடு ஸாம்யமுடையது என்றால் முகமென்கிற வஸ்து வேறாயும் சந்திரனென்கிற வஸ்து அதனில் வேறாயுமிருந்தாலொழிய ஸாம்யம் நிர்வஹிக்க முடியாதன்றோ; "तद्भिन्नत्वे सति तद्गतभूयोधर्मवत्त्वं साम्यम्" என்றுதானே ஆலங்காரிகர்கள் ஸாம்யலக்ஷணம் சொல்லுகிறார்கள்; பரப்ரஹ்மம் வேறாயும் முக்த புருஷன் வேறாயு மிருந்தாலொழிய "ஸாம்யமுபைதி" என்றது சேராதே—இத்யாதிகளைச் சிறிதும் ஆலோசியாமல் ப்ரஹ்மாத்வைத வாதம் செய்கின்றார்கள். "மாணவக: அக்நிரேவ பவதி" என்றால் என்ன அர்த்தமோ அது தான் (ப்ரஹ்மைவ பவதி) என்பதற்கும்—என்றறிவதற்கு சிரமமொன்று மில்லை. இவ காரஸ்தாநே ஏவகாரக: என்க.

தைத்திரீய ஸம்ஹிதை இரண்டாவது காண்டம் முதல் ப்ரச்நத்தில் *विष्णुरेव भूत्वा इमान् लोकानभिजयति* என்றொரு வாக்யமுள்ளது. இது மோக்ஷ ப்ரகரணமன்று. இங்கு ஏவகாரம் இவகாரஸ்தாநே வந்திருக்கிறதென்பதை வேதபாஷ்யகாரர்களும் அறிந்திருக்கின்றார்கள். *ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி* என்றவிடத்துள்ள ஏவகாரமும் இதுபோன்றதே யென்பதை யறிவதற்கு அசக்தர்களல்லர். ஆளவந்தாரருளிச் செய்த "அபிநிவேச வசீக்ருத சேதஸாம் பஹூவிதாமபி ஸம்பவதி ப்ரம:" என்கிற ச்லோகரத்நமே ஸுப்ரதிஷ்டிதமாகிறதென்று நிற்கின்றோம். ... ... ... ... *

---

# 7. ஐந்து சிஷ்யர்களின் இதிஹாஸம்

ஒரு அக்ரஹாரம். அங்கு ஒரே திருமாளிகை. அத்திருமாளிகைக்காரர் பரமாஸ்திகர். ஹவ்யகவ்யப்ரஸக்தி நேர்ந்தால் உறவினருள்ள வேறே யொரு நகரத்திற்குச் சென்று நடத்திவருவதோ அவர்களை இங்கு வரவழைத்து நடத்திக் கொள்வதோ அவருடைய வழக்கம். இப்படி யிருக்கையில் அந்த அக்ரஹாரத்

திற்கு ஒரு ஜீயர் ஸ்வாமி ஐந்து சிஷ்யர்களுடன் வந்து சேர்ந்து அவ்விடம் வாஸ யோக்யமாயிருக்கிறதென்று உகந்து ஸ்ரீவசநபூஷணகாலக்ஷேபம்நடத்தி வந்தார்.

அவ்வூரில் ஒரு திருமாளிகைக்காரர் இருக்கின்றாரே, அவருடைய குமாரனுக்கு உபநயநம் செய்ய நேர்ந்தது. அவர் ஜீயர் ஸ்வாமியிடம் வந்து "இவ்வுபநயனத்தை இவ்விடத்திலேயே நடத்தலாமென்று பார்க்கிறேன்; ஸ்வாமி ஸன்னிதியில் காலக்ஷேபம் செய்கிற ஐவரையும் அனுப்பியருளி கோஷ்டீபரிபாலனம் செய்விக்கவேணும்" என்று விஜ்ஞாபித்தார். ஸ்வாமியும் 'இதற்கென்ன ப்ரமாதம், அப்படியே யாகிறது' என்று இசைந்து சிஷ்யர்களுக்கும் நியமனம் தந்தருளினார்—'இவர் அபேக்ஷிக்கிற ஸமயங்களில் சென்றிருந்து கோஷ்டியை நடப்பித்து வாருங்கள்' என்று. பிறகு அந்த க்ருஹஸ்தர் அளவு கடந்த ஆனந்தங்கொண்டார். ஸத்பாத்ரங்களான ஐந்து ஸ்வாமிகள் நம்முடைய குடிலை அலங்கரித்து கோஷ்டியைச் சிறப்பாக நடத்திவைக்கும்படியான பாக்கியம் பெற்றோமேயென்று உள்ளம் பூரித்தார்.

உபநயந முஹூர்த்த நாள் ஸமீபித்து விட்டது. முதல்நாள் ததீயாராதனம் என்று நடத்துவதுண்டே; அன்றைய வெற்றிலை பாக்கு கோஷ்டிக்காக ஜீயர் ஸ்வாமியின் சிஷ்யர்களை ஆதரவோடு அழைத்தார். அவர்களும் வந்து சேர்ந்தார்கள். அவர்களில் ஒருவர் வயது சென்றவர்; மற்றொருவர் வித்யையில் சிறந்தவர்; இன்னொருவர் குலத்தில் உயர்ந்தவர்! வேறொருவர் வடிவழகில் சீரியர்; பிறரொருவர் மிக்க தனிகர். சந்தனமெடுக்கவேண்டிய ஸமயம் வந்தது. க்ருஹஸ்வாமியானவர் சந்தனமெடுத்து வயதில் பெரியவரான ஸ்வாமிக்குக் கொடுக்கப்போனார். அவரும் கைநீட்டி வாங்கப்போகுகையில் வித்யையில் சிறந்தவரான மற்றொருவர் 'ஓய்! அநுசிதமான காரியம் செய்யத்தகாது; தலை நரைத்ததனாலேயே ஓர் ஏற்றம் வந்துவிடுமா? "வித்வாந் ஸர்வத்ர பூஜ்யதே" "ஜ்ஞாநேநஹீந: பசுபிஸ் ஸமாந:" என்பதை நீர் கேட்டதில்லையோ! இப்படி வாரும், என்றழைத்தார். அதுகேட்ட அவர் 'யுக்தந்தான் இது' என்றெண்ணி அந்த வித்வானிடம் சந்தனம் கொடுக்கப்போனார்.

அப்போது, குலத்தில் பெருத்தவரான இன்னொருவர் "ஓய்! வயஸ்ஸையும் வித்யையையும் யார் கேட்பார்? ஆபிஜாத்யமன்றோ அனைத்தினும் சிறந்தது; என்னுடைய குலம் எப்படிப்பட்டதென்று ஜீயரையே போய்க் கேளும்; அல்லது இவர்களையே கேட்டுப் பாரும்; திருமங்கையாழ்வார் 'குலந்தரும் செல்வம் தந்திடும்' என்று குலத்தைத்தானே முதலில் சொன்னார்; அறிவு கெட்ட அந்தணரே! இப்படி வாரும்" என்றழைத்தார். இதுவும் யுக்தந்தானென்று அவரிடம் கொடுக்கப் போனார். அப்போது தனத்தில் பெருத்த இன்னொருவர் 'ஓய் அசட்டு ப்ராஹ்மணரே! * सर्वे जना: काञ्चनमाश्रयन्ते * என்று கேட்டிலீரோ? * सर्वमर्थवता जितम् * என்று முள்ளதே. *பொருள் கையுண்டாய்ச் செல்லக் காணில் போற்றியென்றேற்றெழுவர், இருள்கொள் துன்பத்தின்மை காணில் என்னே யென்பாருமில்லை* என்ற ஆழ்வார் பாசுரமுமறிந்திலீரோ? இவர்களைப்போல் நான் தரித்ரனல்லேன்! உலகமறிந்த தனிகன்; இப்படி வாரும்' என்றழைத்தார். வாஸ்தவந்தானென்று அவரிடம் கொடுக்கப் போனார். உடனே அழகிற்சிறந்த மற்றொருவர் 'ஓய் விவேகமற்றவரே! * रूपमेवास्यतन्महिमानं व्याचष्टे * என்று வேதத்தில் எத்தனை தடவை ஓதியிருக்கிறது; இந்த குக்ராமத்தில் பிறந்த நீர் வேதத்தைக் காதாலும் கேட்டிருக்கமாட்டீர்; ஆண்டாள் * குழலழகர் வாயழகர் கண்ணழகர் * என்றுஅழகில் தானே யீடுபட்டிருக்கிறாள். மற்றவர்களுடைய பெருமைகளெல்லாம் கண்ணுக்குத் தெரியாது; அவரவர்கள் சொல்லக் கேட்கவேணும்; என்னுடைய பெருமை அப்படியன்றே; பார்க்கும்போதே உமக்குத் தெரியவில்லையா?

குருடரே! இப்படி வாரும்' என்றழைத்தார். உண்மைதானென்று அவரிடம் கொடுக்கப் போனூர்.

வயஸா ஜ்யேஷ்டர் வாளாவிருந்திலர். 'ஓய்! என்னவென்று நினைக்கிறீர்? வயோவ்ருத்தரென்கிற சிறப்பு உலகமறிந்தது; என்னைவிட்டு வேறொருவரிடம் கொடுத்தீராகில் என்னபாடு படுவீரோ பாரும்' என்றூர். அந்த க்ருஹஸ்தர் மிகவும் அஞ்சி நடுங்கி சந்தனக் கிண்ணியைக் கீழே வைத்துவிட்டு தெண்டன் ஸமர்ப்பித்து நின்றூர்; ஐவரும் எழுந்து போய்விட்டார்கள். கோஷ்டி நடைபெருமலே மேல் காரியங்கள் நிறைவேறின.

பிறகு க்ருஹஸ்தர் போஜநாதிகளை முடித்துக்கொண்டு ஜீயர் ஸ்வாமியிடம் சென்று நடந்த செய்திகளை விஜ்ஞாபித்து "இன்று இப்படியாய்விட்டது; கோஷ்டி அடியோடு நடைபெறவில்லை; நாளைக்கு உபநயநம்; அந்த கோஷ்டியாவது அழகாக நடந்தேறும்படி நியமித்தருளினல் நல்லது" என்று கண்ணுங் கண்ணீருமாய் நின்று பிரார்த்தித்தார். 'நீர் புறப்பட்டுப் போம், நாளைய கோஷ்டி நன்ருகவே நடக்குமாறு திட்டம் செய்கிறேன்' என்றுசொல்லி அவரை அனுப்பிவிட்டு சிஷ்யர்களான ஐவரையும் விளித்து "நீங்கள் ஸ்ரீவசந பூஷணுதிகாரிகளாயிருந்துவைத்து இப்படி அஹங்காரப்படுவது நன்ருயில்லை; 'நைச்யம் பாவிக்கவேணும்' என்றல்லவோ ஸ்ரீவசநபூஷணத்திலிருக்கிறது; நாளைக்காவது நைச்யம் பாவித்து கோஷ்டியை அழகாக நடத்திவைத்து வாருங்கள்" என்று நியமித்தார்.

அவர்களும் அப்படியேயென்று தலைதுலுக்கி மறுநாள் கோஷ்டிக்குச் சென்ருர்கள். ஸமயத்தில் சந்தன மெடுக்கும்போது ஒவ்வொருவரும் கைகூப்பிவிட்டார். 'நீசனேன் நிறையொன்றுமிலேன். நானு அதிகாரி?' என்று ஒவ்வொருவரும் இதையே சொல்லி ஒருவரும் கைநீட்டி வாங்கவில்லை. அன்றைக்கும் கோஷ்டி நடைபெருமலே போயிற்று. நமக்கு இவ்வளவுதான் ப்ராப்தமென்று அவர் வருத்தத்தோடே கிடந்தார். ஜீயர் ஸ்வாமி இதையும் கேள்விப்பட்டு 'இப்படிப்பட்ட சிஷ்யர்களா நமக்குக் கிடைத்தார்கள்!' என்று பரிதபித்து அவ்வூரைவிட்டு அகன்ருர். *

---

## 8. காதல் அன்பு வேட்கை அவா

ஒருவிஷயத்திலே ஆசையுண்டானல் அவ்வாசையைச் சொல்லும் சொற்கள் பலவுள்ளன. தென்மொழியிலும் பலவுள, வடமொழியிலும் பலவுள. காதல் அன்பு வேட்கை அவா என்பது தமிழ்ச்சொற்கள். ஸங்கம் காமம் அநுராகம் ஸ்நேஹம் என்பன ஸம்ஸ்க்ருத சப்தங்கள். 'இவை பரஸ்பரம் பர்யாய பதங்களே யன்றி இவற்றில் பொருள் வாசியில்லை' என்றே பொதுவாகப் பலரும் நினைத்திருப்பது. இலக்கிய நூல்களை நோக்குமிடத்து இச்சொற்கள் கலசிக் கலசி வருவனவாகக் காண்கையாலே, காதல் என்ருலும் ஆசைதான் வேட்கையென்ருலும் ஆசைதான் அன்பு என்ருலும் ஆசைதான்; அவா என்ருலும் ஆசைதான் என்று கொள்வதற்குக் குறைவில்லாமலிருக்கிறது, இப்படியே, ஸங்கம் காமம் அநுராகம் ஸ்நேஹம் என்கிற ஸம்ஸ்க்ருத பதங்களையும் பரஸ்பர பர்யாயங்களாகக் கொள்வதற்கு ஸம்ஸ்க்ருத லக்ஷ்யங்களில் ஔசித்யம் தெரியவருகிறது.

ஆனல் நம் ஆசாரியர்கள் இவற்றில் அவஸ்தாபேதத்தை யிட்டுப் பொருள் வாசியைக் காட்டுகின்ருர்கள், இதை விவரிப்பதற்குமுன்னம் ஒன்று தெரிவிக்கி

ளூம், அமர கோசத்தில் " रम्भा तु कदली मोचा - ரம்பா து கதலீ மோசா" என்று வாழைக்குப் பர்யாய நாமங்கள் படிக்கப்படுகின்றன. இப்படியே " आम्रश्चूतो रसालोऽसौ- ஆம்ரச் சூதோ ரஸாலோஸௌ" என்று மாமரத்திற்குப் பர்யாயநாமங்கள் படிக்கப்படுகின்றன. கொட்டை வாழை, பேயன் வாழை, பச்சை வாழை, இலைவாழை....என்று பலவாசிகள் வாழையிலுள்ளன. மாமரத்திலும், தேன்மா ஒட்டுமா நீலம் என்று பலவாசிகளிருக்கின்றன. இந்த ஜாதிபேதங்களுக்கு ஏற்பவே நிகண்டுகளில் நாமபேதங்கள் ஏற்பட்டிருக்கின்றனவென்றும், இதை விவேகித்து அறிந்துகொள்ள முடியாமையாலே எல்லா ஜாதிகளிலும் எல்லாச் சொற்களையும் பர்யாயமாக ப்ரயோகித்து வருகிரூமென்றும் ஆழ்ந்த ஞானமுடையோர் சொல்லக் கேட்டிருக்கிரூம். இதை ப்ரக்ருத விஷயத்திலும் நினைப்பது.

இனி, காதல் அன்பு வேட்கை அவா என்கிற சொற்கள் எங்தெந்த அவஸ்தா பேதத்தையிட்டுத் தோன்றியவை என்பதை [மணவாள மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தியை யநுஸரித்து] விவரிக்கின்ரூம். ஒரு விஷயத்தைக் கண்டபோதே முதற்காட்சியில் முன்னம் உண்டாகிற ஆசை காதலெனப்படும். இதுவே ஸம்ஸ்க்ருதத்தில் ஸங்கமெனப்படும்.

* ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: * என்கிறபடியே முன் சொன்ன ஆசைக்கு அடுத்தபடியாய் அவ்விஷயத்தை அநுபவித்ததல்லது நிற்கவொண்ணுதபடியாய்த் தோன்றுகின்ற ஆசை அன்பு எனப்படும். இதுவே ஸம்ஸ்க்ருதத்தில் காமமெனப்படும்.

இவ்வாசைக்கு அடுத்தபடியுண்டாமதாய், அநுபவிக்கவேண்டிய விஷயத்தில் ஆசை இடையருமல் தொடர்ந்து செல்லும்படியான அவஸ்தை ஒன்றுண்டே அது வேட்கையெனப்படும். இதுவே ஸம்ஸ்க்ருதத்தில் அநுராகமெனப்படும். अनुस्यूतो रागः=अनुरागः ॥

அதன்பிறகு, அவ்விஷயத்தை மேன்மேலும் அநுபவித்துக்கொண்டேயிருக்குமதொழிய விட்டுப்பிடிக்க முடியாதபடியான ஓர் அவஸ்தை ஏற்படுவதுண்டே அதுதான் அவாவென்பது; இதுவே ஸம்ஸ்க்ருதத்தில் ஸ்நேஹமெனப்படும்.

இப்படிப்பட்ட ஆசையில் அவஸ்தா பேதங்கள் விஷயாந்தரங்களிலே யீடுபட்டவர்களுக்கு அநுபவவேத்யமாயிருக்கும். ஒரு கவி " अदर्शने दर्शनमात्रकामाः दृष्ट्वा परिष्वङ्गरसैकलोलाः । अलिङ्गितायाम् पुनरायताक्ष्याम् आशास्महे विग्रहयोरभेदम् ॥ " என்ருன். இந்த ச்லோகத்தை நம் ஆசாரியர்கள் பகவத் விஷயத்திலே கொண்டு ரஸிப்பிக்கிருர்கள், திருநெடுந்தாண்டகத்திலே (21) * மைவண்ண நறுங்குஞ்சிப் பாசுரத்தின் பட்டர்படி வியாக்கியானம் ஸேவிக்க.

ப்ரஹ்லாதாழ்வான் அழகியசிங்கப் பெருமானிடம் தான் ப்ரார்த்தனை செய்து கொள்ளும்போது " या प्रीतिरविवेकानां विषयेष्वनपायिनी— யா ப்ரீதிரவிவேகாநாம் விஷயேஷ்வநபாயிநீ" என்று அவிவேகிகளுக்கு விஷயாந்தரங்களிலுண்டாகும் ப்ரீதியை எடுத்துக்காட்டி அந்த ப்ரீதியெல்லாம் தனக்கு பகவான் திறத்திலேயே உண்டாகப் பெறவேணுமென்று வரம் கேட்கிருன்.

காதல் அன்பு வேட்கை அவா என்று உத்தரோத்தரம் விபாகதசையை யடைந்து வளரும் ப்ரீதிவிசேஷம் நமக்கு பகவத் விஷயத்திலே உண்டாகவேணு மாஞல் பகவானுடைய திருமேனியை ஸேவிக்கப்பெற்ருலல்லது உண்டாக வழி யில்லை. புஷ்பம் சந்தனம் மாதர் மற்றும் போக்ய பதார்த்தங்கள் இவற்றைக் கண்டாலொழிய நமக்கு அவற்றில் ப்ரீதியுண்டாவதில்லை. அதுபோல பகவா னைக் கண்டாலொழிய நமக்குக் காதலோ அன்போ வேட்கையோ அவாவோ இவை யுண்டாக மாட்டா.

"குழுமித் தேவர் குழாங்கள் கைதொழச் சோதி வெள்ளத்தினுள்ளே எழு வதோருரு என்னெஞ்சுள்ளெழும் ஆர்க்குமறிவரிதே" என்று நம்மாழ்வாரருளிச் செய்கிறபடி எம்பெருமானை நெஞ்சுள்ளே கண்டு ப்ரீதியை வளர்க்கும்படியான பாக்கியம் அஸ்மதாதிகளுக்கு ஒருபோதும் எட்டாது. அஸ்மதாதிகளுக்கு ப்ரீதி யுண்டாகும் பொருட்டே எம்பெருமான் திவ்யமங்கள விக்ரஹ பரிக்ரஹம் பண்ணி அர்ச்சாரூபத்தை ஏற்றுக்கொண்டனன். ஸ்ரீவசந பூஷணத்தில் (40)

"இதுதான் சாஸ்த்ரங்களால் திருத்தவொண்ணுதே விஷயாந்தரங்களிலே மண்டி விமுகராய்ப் போரும் சேதநர்க்கு வைமுக்யத்தை மாற்றி ருசியை விளைக் கக் கடவதாய் ருசி பிறந்தால் உபாயமாய் உபாயபரிக்ரஹம் பண்ணிஞல் போக் யமுமாயிருக்கும்" என்ற சூர்ணையை இங்கே அநுஸந்திப்பது. இந்த சூர்ணை யில் "இதுதான்" என்றது இவ்வர்ச்சாவதாரந்தானென்றபடி. ஆக, நமக்கு பக வத் விஷயத்தில் காதல் அன்பு வேட்கை அவா என்னுமிவை வளருவதற்கு அர்ச்சாவதார ப்ராவண்யமல்லது வேறொரு தஞ்சமில்லையென்றதாயிற்று.

---

# 9. பகவத் விஷயாதிகாரிகள்

உலகில் எம்பெருமான் ஈந்தருளின கலைகளுக்குக் கங்குகரையில்லை. "கலை களும் வேதமும் நீதிநூலும் கற்பமும் சொற்பொருள் தானும் மற்றை நிலை களும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையிஞ லருள்செய்து" என்ற திருமங்கை யாழ்வார் திருமொழியின்படி பேரருளாளனை பெருமான் பாருலகில் பரவவிட்ட சாஸ்த்ரங்கள் அளவுகடந்தவை. ஆசார்ய ஹ்ருதயத்தில் "முனிவரையிடுக்கியும் முந்நீர் வண்ணனுயும் வெளியிட்ட சாஸ்த்ர தாத்பர்யங்களுக்கு" என்றருளிச் செய்யப்படுகிறது. அதாவது வ்யாஸ பராசராதி மஹர்ஷிகளை ஆவேசித்து அவர்களது வாக்காக சாஸ்த்ரங்களை வெளியிட்டானென்றும், தானே நேராகத் தன் வாக்காகவே சாஸ்த்ரதாத்பர்யத்தை வெளியிட்டானென்றும் சொன்ன வாறு. இதில் சாஸ்த்ரமென்றும் சாஸ்த்ரதாத்பர்யமென்றும் இரண்டு விபாகம் காட்டப்பட்டுள்ளது. மஹர்ஷிகளாலே ப்ரவர்த்திப்பிக்கப் பட்டவைகளுக்கு சாஸ்த்ரமென்று பெயர்; தானே ப்ரவர்த்திப்பித்த திருமந்த்ரத்திற்கு சாஸ்த்ர தாத்பர்யமென்று பெயர்—என்பதாக ஆசார்ய ஹ்ருதயகாரருடைய திருவுள் ளம். ஸகல சாஸ்த்ர ஸாரமென்னும் பொருளிலே சாஸ்த்ரதாத்பர்யமென்கிற சொல் பிரயோகிக்கப்பட்டுள்ளது.

ஸகல சாஸ்த்ர தாத்பர்ய ஸாரமெனப்படுவது திருவஷ்டாக்ஷர மஹாமந் த்ரமொன்று மாத்திரமேயன்று; திருமந்த்ரம் த்வயம் சரம ச்லோகம் எனப்படு கிற ரஹஸ்யத்ரயமுமாம். இதனைச் சுட்டியே "முமுக்ஷுவுக்கறிய வேண்டும் ரஹஸ்யம் மூன்று" என்று பிள்ளையுலகாசிரியர் அருளிச் செய்தார். இம்மூன்று ரஹஸ்யங்களுக்கும் மூலத்தின்மேல் வியாக்கியானமாக முமுக்ஷுப்படி முதலிய

சிலரஹஸ்யக்ரந்தங்கள் தோன்றியுள்ளன. விசதவாக்சிகாமணியான மணவாள மாமுனிகளின் அருமருந்தன்ன வியாக்கியானங்களும் அவதரித்துள்ளன. இவற்றைக்கொண்டு ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே ரஹஸ்யத்ரயத்தின் அரிய பெரிய பொருள்களை—அகாரார்த்த மின்னது, உகாரார்த்த மின்னது, மகாரார்த்த மின்னது, நம: பதார்த்த மின்னது...........என்கிற முறையில் அறிந்துகொள்ள முடிகின்றது.

இந்த ரஹஸ்யத்ரயத்தின் பொருள்களை வெகு விசதமாக விளக்குவதற்கென்றே ஆழ்வார்களின் ஈரச் சொற்களான திவ்ய ப்ரபந்தங்கள் அவதரித்தன. இவற்றுள் நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழிக்கு ஒப்புயர்வற்ற பெருமை அமைந்துள்ளது. ஆங்காங்கு திவ்யதேசங்களில் எம்பெருமான்களுக்குப் புறப்பாடுகள் நடைபெறும்போது திருவீதிகளில் திருவாய்மொழியை ஸேவிக்கக்கூடாதென்று ஸ்ரீமந்நாதமுனிகளோ ஆளவந்தாரோ எம்பெருமானாரோ இட்டருளின கட்டளையானது அன்று முதலின்றறுதியாக எங்கும் பரிபாலிக்கப்பட்டு வருகிறது. எம்பெருமான் தனது திவ்யாஸ்தானத்தில் எழுந்தருளி யிருந்தே பராக்கின்றிக்கே திருச்செவிசாத்தியருள வேண்டிய திவ்ய ப்ரபந்தம் திருவாய்மொழி-என்று நம்பூர்வாசாரியர்கள் திருவுள்ளம் பற்றினது மிகவும் உசிதமானது. இ:்தொன்று கோண்டே திருவாய்மொழியின் பெருமையை நாம் நன்கு உணரலாம், அரிய பெரிய பல வியாக்கியானங்கள் திருவவதரித்ததும் திருவாய்மொழிக்கே யன்றோ.

அந்த வியாக்கியானங்களுள் ஈடுமுப்பத்தாறுயிரப்படி யென்னும் வியாக்கியானம் மிகச் சிறந்ததாகக் குலாவப்பட்டு வருகின்றது. இதற்கே பகவத் விஷயமென்று வ்யபதேசம். திருவாய்மொழி மூலத்திற்கே பகவத் விஷயமென்னும் பெயருண்டு என்றும், அதன் வியாக்கியானங்க ளெல்லாவற்றுக்குமே பகவத் விஷயமென்னும் பெயருண்டு என்றும் சிலர் சொல்லவந்தாலும் அதனை நாம் மறுப்போமல்லோம், இதிலென்ன விவாதம். திருவாய்மொழியைக் கொண்டு போது போக்குவதுதான் பகவத் விஷய காலக்ஷேப மெனப்படுகிறதென்பதில் யாருக்கும் விவாத மில்லையன்றோ. ஸ்ரீ ராமாயணம் ஸ்ரீபாகவதம் ஸ்ரீவிஷ்ணு புராணம் முதலான இதிஹாஸ புராணங்களும் பகவானை விஷயீகரித்தே அவதரித்திருந்தாலும் அவற்றில் ஒன்றையும் பகவத் விஷயமென்பாரில்லையே.

இக்காலத்தில் நம் விசிஷ்டாத்வைத ஸித்தாந்த க்ரந்தங்களைத் தூஷிப்பதையே விரதமாகக் கொண்டிருக்கின்ற அத்வைதி வித்வானொருவர் தமது நூலொன்றில் ஓர் அதிசயம் கண்டுபிடித்து எழுதியிருக்கின்றார்; அ:்துஉண்மை பொருந்தியதும் ரஸிக்கத் தக்கதுமாயிருப்பதால் ஸம்ஸ்க்ருதத்திலுள்ள வதனை மொழிபெயர்த்து இங்கெழுதுகின்றோம்; அதாவது, "ப்ரஹ்ம ஸூத்ரத்திற்குப் பல பாஷ்யங்கள் தோன்றியுள்ளன; அவற்றை வ்யவஹரிக்கும்போது சங்கர பாஷ்யமென்றும் நீலகண்ட பாஷ்யமென்றும் மத்வபாஷ்யமென்றும் அந்தந்த பாஷ்யகர்த்தாக்களின் பெயர்களையிட்டு வ்யவஹரிக்கின்றதுலகம்; ஸ்ரீராமாநுஜர் செய்த பாஷ்யத்தைமாத்திரம் ராமாநுஜபாஷ்ய மென்னமல் ஸ்ரீபாஷ்ய மென்றே உலகமெல்லாம் வழங்கிவருகின்றது. இது அந்த பாஷ்யத்திற்கு ஓர் அதிசயமே, பாக்யமே. இதற்காகப் பிறர் அஸூயைப் படலாமேயொழிய வேறொன்றும் செய்யமுடியாது" என்று. இதுபோல் பகவத்விஷயமென்ற வ்யவஹாரம் கடல் சூழ்ந்த மண்ணுலகில் ஒரே ஒரு க்ரந்தரத்னத்திற்குத் தான் நிகழ்ந்து வருகின்றதென்றால் இதிலும் பிறர்பொறாமைப்படவேண்டுமத்தனையே,

திருவாய்மொழியின் பெருமையை நம்மவர்கள் அறிந்திருப்பதும் பேசுவதும் எழுதுவதும் இருக்கட்டும். இதைக் கம்பர் அறிந்திருப்பதுபோலவும் பேசியிருப்பது போலவும் வேறு யாரும் அறிந்திலர், பேசிற்றிலர் என்னலாம். கம்பர் ஸ்ரீமந் நாதமுனிகளின் காலத்திலிருந்தவரொன்று சில பெரியார் எழுதி யிருந்தாலும், இவர் பட்டர் காலத்திலிருந்தவரென்றும் பட்டருடைய காலக்ஷேப கோஷ்டிகளில் அந்வயிக்கும் பாக்கியமும் பெற்றிருந்தவரென்றும் பொருத்தமான சான்றுகளுடன் பல பெரியார்கள் நிரூபிக்கிறார்கள். அவர் இயற்றிய சடகோபரந்தாதியில் “கூட்டங்கள் தோறும் குருகைப் பிரான் குணங்கூறு மன்பரீட்டங்கள் தோறுமிருக்கப் பெற்றேம், இருந்தெம்முடைய நாட்டங்கள்தோறும் புனல்வந்து நாலப்பெற்றேம்” என்றொரு செய்யுள் இன்சுவையே வடிவெடுத்தது. நம்மாழ்வாருடைய திருக்குணங்களைக் கூட்டங் கூட்டமாகக் கூடிக் குலாவிப் பேசுமவர்களின் கோஷ்டிகளிலெல்லாம் தாம் இருக்கப்பெற்றதாகவும், அப்படியிருக்கும் போது கண்களில் தாரை தாரையாக ஆனந்த பாஷ்பம் பெருகப்பெற்றதாகவும் கூறியுள்ளார். இத்தகைய ஓர் அதிசயம் திருவாய்மொழிக்குத் தவிர மற்றொன்றுக்கும் ஸம்பாவிதமன்று. வெறும் மூலத்தைக் கேட்டாலுமே கல்லும் கரையும். அது சொல்லின்பத்தைப் பொறுத்தது. பொருட்சுவை கண்டு ரஸிக்கவேணுமானால் ஈடுமுப்பத்தாறாயிரப்படி தவிர வேறு புகலில்லை. இதையருளிச் செய்தவர் நம்பிள்ளை; பட்டோலை கொண்டவர் வடக்குத் திரு விதிப்பிள்ளை. அஜ்ஞர், அல்பஜ்ஞர், மிதஜ்ஞர் என்று வழங்கப்படுகின்ற நம்போல்வாரைவிட்டு மிகச் சிறந்த ஞானிகளைக் கூறவேணுமானால் **பஹுஜ்ஞர்** என்கிற சொல்தானுள்ளது. ஸர்வஜ்ஞனென்னும் பெயர் ஸர்வேச்வரனுக்குத் தவிர மற்று எவர்க்கும் ஏலாதென்கிறார்கள்; உண்மையில் அகண்ட பூமண்டலத்திற்குள் ஸர்வஜ்ஞரென்னத் தகுதியுடையார் நம்பிள்ளை யொருவரே யென்று சபதம் செய்யலாம்.

இக்காலத்தில் அச்சுக்கூடங்கள் தலையெடுத்து எந்தப் புத்தகமும் வெகு ஸுந்தரமாக அச்சிடப்பட்டு மலிந்து கிடக்கின்றன. ச்லோகாநுக்ரமணிகை, பாதாநுக்ரமணிகை, பதாநுக்ரமணிகை, விஷயஸூசிகை முதலானவற்றோடுங் கூடி ஒவ்வொரு ஸ்ரீகோசமும் பலவித லிபிகளில் பல வியாக்கியானங்களோடும் பல பதிப்புகளேறி மனைதோறுமடுக்கப்பட்டிருக்கின்றது. அக்காலத்தில்ஊருக்கு ஒரு ஸ்ரீகோசம் கிடைப்பதே அரிதாயிருக்கும். அதுதானும் ஓலைச்சுவடி. அதில் அநுக்ரமணிகையோ விஷய ஸூசிகையோ எதற்கும் ப்ரஸக்தியே யிராது. மற்றும் பலவகையான அஸௌகரியங்கள் மலிந்தஸமயம் அது. அஸ்தமித்தபிறகு புஸ்தகம் பார்க்க ஸௌகரியமேயிராது. பெரும்பாலும் அப்படிப்பட்ட காலத்தில் பல்லாயிரக்கணக்கான ப்ரமாண வசனங்களை அந்தந்த ஸந்தர்ப்பங்களுக்கு வெகு பொருத்தமாக எடுத்துக்காட்டும் மஹாக்ரந்தம் ஈடுதவிர வேறொன்றும் விரலிட்டு எண்ணத்தகுந்ததாக இல்லையே.

இப்போது நம் போல்வார் ஒரு சிறு நூல் எழுதவேண்டுமானாலும் பல க்ரந்தங்களை எதிரே பரப்பி வைத்துக்கொண்டு வெகு ச்ரமப்பட்டு ப்ரமாணங்களைத் தேடி யெடுத்தெழுதுவதும், அநுக்ரமணிகாதிகளில்லாத புத்தகங்களைக் கண்டு சீறிவிழுவதும், பெரும்பாலும் முன்னோர்கள் உதாஹரித்த வசனங்களையே கொண்டு நிரப்புவதும், ஒரு ப்ரமாணங்கூட கண்டஸ்தமாக இல்லாமலிருப்பதுமே பெரும்பான்மையாகக் காண்பது. ஈடு அவதரித்திருப்பது இப்படியன்றே. அதற்குமுன் ஒரு க்ரந்தமும் இப்படி ப்ரமாண புஞ்ஜ பூயிஷ்டமாகக் கண்டதில்லை. ஆங்காங்கு எடுத்தாளுகிற ப்ரமாணங்களைப் பார்த்தால் அவை அப்போதாகத் தேடிப்பிடித்து எழுதப்பட்டவையாக நினைக்க ப்ரஸக்தியேயில்லை. ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணாதிகளெல்லாம் கண்டஸ்தமாயிருந்தா

லொழிய அந்த வியாக்கியானம் அவ்விதமாக அமைந்திராதென்று சொல்லுவதற்கோ எழுதுவதற்கோ நாமா அதிகாரி?

இப்படிப்பட்ட அபரிமித வைபவம்பொருந்திய மஹாக்ரந்தத்தில் அதிகாரிகளாவதற்கு எவ்வளவு யோக்யதை வேணுமென்பதைப் பற்றிச் சொல்லுவதற்கும் நாம் அநதிகாரிகளே. ஆனால் உலகரீதி எவ்வாறிருக்கிறதென்னில், ஸம்ஸ்க்ருதம் வாசித்தவர்கள் ஸ்ரீபாஷ்யம் ஸேவித்து ஸ்ரீ பாஷ்யாதிகாரிகளென்று பட்டம் பெறுவதென்றும் ஸம்ஸ்க்ருதத்தில் அதிக ப்ரவேசமில்லாதவர்கள் பகவத் விஷய ப்ரவசந கோஷ்டிகளில் அந்வயித்து பகவத் விஷயாதிகாரிகளென்று பட்டம் பெறுவதென்றும் காண்கிறது. இதையொரு இகழ்ச்சியாக நாம் எடுத்துக் காட்டுவதாய் யாரும் கொள்ளலாகாது. இதர பாஷைகளின் மேன்மையும் பிரசாரமுமே அதிகரித்து, ஜீவநோபயோகியான கல்விக்கே ஆதிக்யமும் ஏற்பட்டிருக்கு மிக்காலத்தில் ஸ்ரீ பாஷ்யத்தையோ பகவத் விஷயத்தையோ ஸ்மரிப்பாருமில்லை. பெரும்பாலும் திவ்யதேசங்கள் தோறும் பலவிடங்களிலும் ஸ்ரீபாஷ்ய பகவத் விஷய ப்ரவசனம் அவிச்சிந்நமாக நடந்துகொண்டிருந்த காலத்தையும் நாமறிவோம். அடுத்த நூற்றாண்டில் இந்த திவ்ய க்ரந்தங்களின் பெயரைக் காதால் கேட்பதும் அரிதாகுமோ! என்கிற சங்கை பல பெரியார்களின் நெஞ்சிற் குடிகொண்டிருக்கிறது.

"நாவினுள் நின்று மலரும் ஞானக் கலைகளுக்கெல்லாம் ஆவியு மாக்கையுந்தானே அழிப்போடளிப்பவன்தானே" என்பது திருவாய்மொழியில் ஒரு பாசுரம். ஞானக்கலைகளை யுண்டாக்குபவனும் எம்பெருமானே, அவற்றை அபிவிருத்தி செய்பவனும் அவனே; ஒரு காலவிசேஷத்தில் அவற்றை அழிப்பவனும் அவனே என்று இப்பாசுரத்தில் சொல்லப்படுகிறது. உலகங்கள் அழியும்போது ஞானக் கலைகளும் அழிந்தால் அழியட்டும். உலகமுள்ளவரையில் ஞானக் கலைகள் இல்லையானால் குருடர்கள் தவிப்பதுபோல் தவிக்கவேண்டியே வரும் என்பதில் ஐயமில்லை. ஞானக்கலைகளுள் மிகச் சிறந்தது உபயவேதாந்த சாஸ்த்ரமே.

தர்க்கம் வியாகரணம் முதலிய ஸாமாந்ய சாஸ்த்ரங்களை வாசிப்பது வேதாந்த சாஸ்த்ரத்தில் அவகாஹிப்பதற்காகவே யென்பது யாவருமிசைந்த வஸ்து ஸ்திதி. ஆனால் அந்த ஸாமாந்ய சாஸ்த்ரங்களை வாசிப்பவர்கள் பெரும்பாலும் அந்தந்த சாஸ்த்ரங்களோடு நின்று விடுகிறார்களே தவிர அவற்றை வேதாந்த சாஸ்த்ரத்திற்கு சேஷ பூதமாக்குகிறவர்கள் மிகச் சிலரே. ஸம்ஸ்க்ருத வித்வான்கள் பல பலவிடங்களிலிருந்தாலும் காசியில் இருப்பதுபோல் பூமண்டலத்தில் வேறு எவ்வூரிலும் இருக்கமாட்டார்களென்பது பலருமறிந்ததே. அங்கு வியாகரண சாஸ்த்ரமொன்றுக்குத்தான் பிராபல்யம். அதில் ஆழ்ந்த ஞானமுடையவர்கள் ஐந்நூறு பேர்களுக்குமேல் இருப்பர்கள். தர்க்கசாஸ்த்ர பண்டிதர்கள் இருபது பேர்களிருக்கலாம். பொதுவாகப் பண்டிதர்கள்-ஸம்ஸ்க்ருதஜ்ஞர்கள் என்னத் தகுந்தவர்கள் ஆயிரவருளர். இங்குள்ள பாடசாலைகளை எண்ணி முடியாது. பண்டிதர்களின் க்ருஹந்தோறும் ஒவ்வொரு பாடசாலையாம். இதைக் காணும்போதும் கேட்கும்போதும் நமக்கு மிகுந்த அஸூயையே யுண்டாகிறது. மந்த்ர தந்த்ர வைத்ய ஜ்யோதிஷாதிகளில் வல்லவர்களும் நிரம்பி யிருக்கிறார்கள். இவ்வளவு அதிசயம்பெற்ற இவ்வூரில் வேதாந்த சாஸ்த்ர பரிசயம்பெற்றவர்கள் மிகச்சிலரே யுள்ளார்கள். அந்த வேதாந்திகளும் அத்வைத வேதாந்தத்திற்கு மேல் வேறொரு வேதாந்தமிருப்பதாக நினைப்பவர்களேயல்லர். த்ராவிட வேதாந்தத்திற்கு இங்கு ப்ரஸக்தியே கிடையாது. இவ்விடத்தில் சில வருஷங்களாக **ஸ்ரீராமாநுஜ ஸம்ஸ்க்ருத வித்யாலயம்** என்ற பெயரால் ஒரு ஸ்ரீவைஷ்ணவ பாடசாலை

ஸ்தாபிக்கப்பட்டு ஸ்ரீவைஷ்ணவ தனிகர்களான பலஸேட்டுக்களின் விசேஷமான ஆதரவின்கீழ் வெகு சிறப்பாக நடந்து வருகிறது. இதிலும் வியாகரண வித்யார்த்திகள் அதிகமே யொழிய வேதாந்த வித்யார்த்திகள் குறைவுதான். இம்மஹா க்ஷேத்ரத்தில் இவ்வோரிடத்தில் தான் விசிஷ்டாத்வைத வேதாந்தமென்பது சிறிது தலைகாட்டி வருகிறது. இந்த வித்யாலயத்தில் ஒருஸமயம் அடியேனுடைய சில உபந்யாஸங்கள் ஸம்ஸ்க்ருத பாஷையில் நடைபெறவேணுமென்று ஆப்தர்களான சில வித்வான்கள் ஆவலோடு கோரினர்கள். திவ்ய ப்ரபந்த திவ்யார்த்தங்களின் ரஸங்களைக் காசீ வித்வான்களுக்கு யதாசக்தி ஊட்டவேணுமென்கிற ஆசை அடியேனுக்கு மிகவுமிருந்தது.

சிலவருஷங்களாக அடியேன் திவ்ய ப்ரபந்தங்களை ஸம்ஸ்க்ருதப் படுத்துவதையும் அவற்றை க்ரமேண அச்சிட்டு வருவதையுமே முக்கிய கைங்கரியமாகக் கொண்டிருக்கிறே னென்பது பலர்க்குத் தெரிந்திருக்கும். காசியிலும் இதுகண்ட வித்வான்கள் இவ்விஷயத்தைப் பற்றியே உபந்யாஸம் நடைபெற வேணுமென்று விரும்பினர்கள். அந்த விருப்பம் சர்க்கரைப் பந்தலில் தேன்மழை பொழிந்தது போலாயிற்று அடியேனுக்கு. அப்போது ஆண்டாளுடைய திருப்பாவைக்கு மிக விரிவான ஸம்ஸ்க்ருத வியாக்கியானம் அடியேனெழுதிக் கொண்டிருந்தபடியால் அவ்விடத்தில் அன்று எழுதிய "முப்பத்து மூவரமரர்க்கு" என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தை மூன்று மணிகாலம் உபந்யஸிக்க ப்ராப்தமாயிற்று. அந்தக் கோஷ்டியில் நம்முடைய தேசத்தவரான ஸ்ரீ உ. வே. வியாகரண வேதாந்த வித்வான் நீலமேகாசார்ய ஸ்வாமி யொருவரே தமிழுணர்ந்தவரிருந்தனர். [இந்த ஸ்வாமி இந்த வித்யாலயத்தில் வேதாந்த ப்ரவசந கர்த்தாவாக ஏழெட்டு வருஷமிருந்தவர்.] மற்ற வித்வான்களெல்லாரும் த்ராவிட கரந்தமே யறியாதவர்கள். அப்படிப்பட்டவர்களும் இவ்வர்த்த விசேஷங்களைக் கேட்டு ஆனந்தஸாகரநிமக்நர்களாயினர். இவர்கள் பெரும்பாலும் த்ராவிட ப்ரபந்தங்களை இழிவாக நினைத்து மிருந்தவர்கள். பலாண்டு பலாண்டு வென்று பரிஹஸிப்பது முண்டிவர்கள். அப்படிப்பட்டவர்களுடைய மனம் (19—7—53-ல்) நீராயுருகிநின்றது. இதை இங்கு நாம் ஆத்ம ப்ரசம்ஸையாக எழுதிக் கொள்ளவில்லை. விலக்ஷணமான வோர் ஆனந்தம் மேலிட்டு இதை இங்கு எழுதநேர்ந்தது. "பகவத் விஷயத்தின் பெருமையை இப்பிறவியில் இன்றுதான் நாங்கள் அறியப் பெற்றோம்" என்று அவர்களின் வாயில் வெளிவந்தது மன்றியில், தாங்கள் கற்ற கல்வியெல்லாம் காசுக்கு முதவாதது என்கிற துணிபும் அவர்களுடைய உள்ளத்தில் ஊர்ஜிதமாயிற்று. இவ்வளவோடு இந்த ப்ராஸங்கிக ப்ரஸ்தாவத்தை முடித்துக் கொள்ளுகிறேன்.

இந்த வியாஸத்தில் முக்கியமாக அடியேன் விஜ்ஞாபிக்க நினைத்த விஷயங்களை இனிச் சுருக்கமாகவெழுதி முடிக்கிறேன்.

பகவத் விஷயம் ஸேவித்தவர்களெல்லாரும் பகவத் விஷயாதிகாரிகள் ஆகமாட்டார்களென்பது நீசனேனுடைய நினைவு. ஸ்ரீபாஷ்யம் ஸேவித்தவர்களெல்லாரும் ஸ்ரீபாஷ்யாதிகாரிகளென்னப் பெறலாம்; பகவத் விஷயாதிகாரிகளுக்கு மாத்திரம் தனிப்பட்டவொரு சிறப்புண்டு; அ∴து எளிதில் கிடைக்கக் கூடியதன்று. எம்பெருமானுடைய திருக்குணங்களில் நீர்ப்பண்டமா யுருகிக் கிடப்பதுதான் அது. அது ஜந்மாந்தர ஸஹஸ்ரநற்றவங்களின் பயனாகவே விளையக்கூடியது. *கங்குலும் பகலும்* என்கிற திருவாய்மொழியின் ஈட்டு ப்ரவேசத்திலே பட்டரைப்பற்றி ஒருவாக்யமுள்ளது; அதாவது, "பட்டர் இத்திருவாய்மொழி அருளிச் செய்யும் போதெல்லாம் 'ஆழ்வார்க்கு ஓடுகிற தசையறியாதே அவருடைய பாவ வ்ருத்தியுமின்றிக்கே யிருக்கிற நாம் என் சொல்லு

கிறோம் !' என்று திருமுடியிலே கையை வைத்துக் கொண்டிருப்பர்'' என்பதாம். இதனால் பட்டர் தம்மை பகவத் விஷயத்திற்கு அநதிகாரியென்று திருவுள்ளம் பற்றியிருந்ததாகப் புலப்படுகிறது. அது அவருடைய இயற்கையான நைச்யாநுஸந்தானத்தில் சேர்ந்ததாகட்டும். பொதுவாக பகவத் விஷயாதிகாரிகள் துர்லபர் என்பது அந்த ஸ்ரீஸூக்திகளினால் நன்கு விளங்கும். நாலு வார்த்தைகள் பேசின போதே (அல்லது) எழுதினபோதே இந்த அதிகார அநதிகாரங்களை எளிதாகக் கண்டுணரலாம். பாசுரங்களுக்குப் பொருள் சொல்லிவிடுவதும் ஈட்டுப் பங்க்திகளுக்கு அர்த்தமுரைப்பதும் ச்ரமப்பட்டு ஸம்பாதிக்கக் கூடிய யோக்யதையே. ஆனால் *நின்று நின்று நையும் நெடுங்கண்கள் பனிமல்கவே *என்னெஞ்சம் நின்று நெக்கு அருவிசோருங் கண்ணீர் என்செய்கே னடியேனே *என்னும்படியான நிலைமை வாசிப்பினாலாவது, பங்க்திகளை உருப்போடுவதனாலாவது விளையக்கூடியதன்று. சில வ்யக்தி விசேஷங்களை அடியேன் ஸேவித்திருக்கிறேன்; அவர்களுக்கு சப்தார்த்த ஜ்ஞாந யோக்யதையில் சிறிது குறையிருந்தாலும் நெஞ்சில் கனிவு நன்றாக உண்டு. அன்னவர்களின் திருவாக்கிலிருந்து அருளிச் செயல் புறப்பட்டால் 'அமுதமொழுகுகின்றது' என்று நினைக்கும்படியாயிருக்குமேயல்லது சொற்கள் வெளிவருகின்றன வென்று நினைக்கும்படியிருக்கவே யிராது. எம்பெருமானாரும் கூரத்தாழ்வான் பக்கலிலே பகவத் விஷயம் கேட்க ஆசைப்பட்டாரென்று கேள்விப்படுகிறோம். அப்படிப்பட்ட அதிகாரிகள் இக்காலத்தில் எங்ஙனம் கிடைக்கப்போகிறார்கள்? வ்யக்தி விசேஷங்கள் அடியோடு இல்லையென்று சொல்லப்போகாது. இக்காலத்திலும் ஆங்காங்கு விரளர்களாக வுள்ளார்கள். அதுநிற்க.

திருவாய்மொழி மூலத்தின்மேல் நன்றாகப் பொருள் சொல்லவும், ஈடுமுப்பத்தாறாயிரப்படியை அக்லிஷ்டமாக அந்வயிக்கவும் ஸாமர்த்தியம் பெற்றவர்களையும் பகவத்விஷயாதிகாரிகளென்று ஒருவாறு இசையத்தட்டில்லை. இவ்வகையதிகாரிகள் நாளடைவில் லோபிக்கக் காண்கிறோம். இது மிகவும் சோசநீயமான விஷயம். ஸ்ரீபாஷ்யத்தை ச்ருத ப்ரகாசிகை யோடுங்கூட பரீக்ஷை கொடுக்க முன்வரக்கூடியவர்கள் பலர் தேறுவர்கள். பகவத் விஷயத்தில் அப்படி பரீக்ஷை கொடுக்கக் கூடியவர்கள் தேறுவது அரிதாயிருக்கின்றது. இது அகாதமான ஸமுத்ரம். இதில் நீஞ்சிக் கரைகாண்பது கஷ்டமே. இதில் உதாஹரிக்கப்பட்டுள்ள ஆயிரக்கணக்கான ப்ரமாணவசனங்களில் உபஸ்திதியிருக்க வேண்டியது முதற்காரியம். ஈட்டின் பாஷையே விலக்ஷணமாதலால் அதில் வ்யுத்பத்தி யுண்டாகவேண்டியது மிக முக்கியம். இதை ஸாதிப்பதற்கு ஆஸ்தையும் ஸ்வாஸ்த்யமும் ஆவச்யகமாகும். வெகு ச்ரமப்பட்டு இவ்வரிய பெரிய யோக்யதையை ஸம்பாதித்தால் இஹலோக ப்ரயோஜனம் என்னவுண்டு? என்று கேட்பவர்களே அதிகம். அவர்களது கேள்விக்கு நாம் என்ன விடைகூற முடியும். ஆத்மானந்தம் அபரிமிதம் என்பதொன்றையே நோக்கவேணும்.

---

## 10. சமத்காரமான வொரு ஸ்ரீஸூக்தி

இராவணனாலே திரஸ்கரிக்கப்பட்ட ஸ்ரீவிபீஷணாழ்வான் இராமபிரானிருக்குமிடத்தேற வந்து ஆகாயத்திலிருந்து கொண்டே "ராகவம் சரணம் கத:" என்று சொல்லிப் பெருமாளைச் சரணமடைந்து இச் செய்தியைப் பெருமாள் திருவடிகளிலே விண்ணப்பம் செய்யுமாறு ஸுக்ரீவ மஹாராஜர் முதலானாரை நோக்கி "ஸர்வலோக சரண்யாய ராகவாய மஹாத்மநே, நிவேதயத மாம்க்ஷிப்ரம் விபீஷண முபஸ்திதம்'' என்றான். இதுகேட்ட ஸுக்ரீவன் பெருமாளிடம் வந்து

அதை அப்படியே விண்ணப்பம் செய்யவேணுமே யொழிய வேறொன்றும் சொல்லத்தகாது. ஆனால் அவன் தான் விபரீதமான அபிப்ராயங்கொண்டு அவ்விபீஷணாழ்வான்மீது அவத்யங்களை யேறிட்டு அவனை இந்த கோஷ்டியில் சேர்த்துக் கொள்ளவே கூடாதென்று வலிதாக ஆக்ஷேபங்கள் செய்தான். பெருமாள் "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந" என்று தம் திருவுள்ளத்தைத் திடமாக வெளியிட்ட பிறகுங்கூட ஸுக்ரீவன் தன் பிடிவாதத்தை விடாமல் ஆக்ஷேபத்தையே வலிதாகச் செய்து கொண்டிருந்ததாய்க் காண்கிறது. பெருமாளுடைய திருவுள்ளத்திற்கும் திருவடியின் அபிப்ராயத்திற்கும் பொருந்தாத படி ஸுக்ரீவன் இப்படி ஆக்ஷேபஞ் செய்து கொண்டிருந்தது ஏன்? என்று பலரும் கேட்க நேர்கின்றது. இதற்கு நம் ஆசாரியர்கள் அருளிச் செய்வது பாரீர்;—

"*ஸுக்ரீவம் சரணம் கத:* என்றத்தை நடத்தப் பார்த்தார் மஹாராஜர்;
*ராகவம் சரணம் கத:* என்றத்தை நடத்தப் பார்த்தார் பெருமாள்."

என்று பட்டர் அருளிச் செய்யும் வார்த்தையாம். இது திருவாய்மொழி (4-5-8) பாட்டின் ஈடு முப்பத்தாறுயிரத்திலே காணத் தகும். இந்த ஸ்ரீஸூக்தியின் கருத்தை விவரிப்போம். தன்னிடத்திலே சரணாகதி பண்ணினவன் திறத்தில் அன்பு கொள்வது உலகில் ஸஹஜமானது. அந்த அன்பு ஸாமான்யமாக வல்லாமல் அளவுகடந்திருந்தால் 'இந்த வ்யக்திக்கு யாராலே என்ன அவத்யம் நேருமோ?' என்று அஸ்தாநே பயசங்கையையும் விளைக்கும். ஸ்ரீராகவன் விபீஷணாழ்வானை *ந த்யஜேயம் கதஞ்சந* என்று சொல்லி ஸ்வீகரித்தே தீருவேன் என்று சொன்னதற்குக் காரணம் அவன் தன்னிடத்தில் சரணாகதன் என்பது தானே. ஸுக்ரீவன் அவ்விபீஷணனைப் புகுரவொட்டேனென்று தடுப்பதற்குக் காரணமும் இவ்விதமாகவே யுள்ளது. எங்ஙனே யென்னில்; விபீஷணாழ்வான் ஸ்ரீராகவனிடத்தில் சரணாகதனானது இன்று; இந்த ஸ்ரீராகவன் ஸுக்ரீவனிடத்தில் சரணாகதனானது பண்டே. இராமன் ஸுக்ரீவனை சரணாகதி செய்வதற்கு நியாயமில்லையானாலும் *லோகநாத: புரா பூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி* என்றும், *ஸுக்ரீவம் சரணம் கத:* என்றுமுள்ள ப்ரமாணங்கள் (கிஷ்கிந்தாகாண்டத்தில்) மலிந்துகிடக்கையாலே அது செய்தது அபலபிக்க முடியாத விஷயம். ஆக ஸுக்ரீவன், தன்னிடத்திலே சரணாகதனான ராகவனிடத்திலே பரிவுகொண்டு இவனுக்கு யாரால் என்ன அவத்யம் விளைந்திடுமோவென்று அஸ்தாநே பய சங்கைபண்ண ஔசித்யமிருக்கையாலே விபீஷணனைத் தடுத்தது பொருந்தும் என்று பட்டர் திருவுள்ளம்பற்றினது மிக நன்று.

கம்பர் பட்டர் காலத்திலிருந்தவரென்றும், பட்டர் கோஷ்டியில் அந்வயித்துப் பல அர்த்த விசேஷங்கள் கேட்டவரென்றும் ஆராய்ச்சியில் வல்ல பெரியார்கள் சொல்லுவதுண்டு. மேலே நிரூபித்த அர்த்த விசேஷத்தை பட்டர் கோஷ்டியிலே கம்பர் கேட்டு அதைத் தம்முடைய ராமாயணத்திலே ஒரு செய்யுளாக அமைத்து வைத்திருக்கின்றார், அச்செய்யுளாவது—

"ஆதலான் அபயமென்ற பொழுதத்தே அபயதானம்
ஈதலே கடப்பாடென்பது, இயம்பினீரென்பால் வைத்த
காதலான் இனிவேறெண்ணக் கடவதென்? கதிரோன் மைந்த!
கோதிலாதவனை நீயே என்வயிற் கொணர்தி யென்றான்"

என்பதாம். இச் செய்யுளில் "என்பால் வைத்த காதலால்" என்றது உயிரான வார்த்தை. இது பட்டரிடத்துத் தோன்றிய அர்த்த விசேஷமே யென்றுணர்க.

---

# 11. ஸர்வரக்ஷகரக்ஷணம்

ஸர்வரக்ஷகரக்ஷணமென்னுஞ் சொல்லானது ஒரே வ்யுத்பத்தியினால் இருவகையான பொருள்களைத் தரும். “ஸர்வரக்ஷகஸ்ய ரக்ஷணம்—ஸர்வரக்ஷகரக்ஷணம்” என்று விக்ரஹிக்க வேணுமிச்சொல்லை. ஸர்வரக்ஷகனை பகவானால் செய்யப்படும் ரக்ஷணம் என்பது இதற்குப் பொருளாக யாவருமறிந்தது. இப்பொருளில் ரக்ஷணத்திற்குக் கர்த்தா பகவான் என்பது பெறப்படும். பகவானுக்கு பாகவதர்களால் செய்யப்படும் ரக்ஷணமும் இச்சொல்லுக்குப் பொருளாகத் தேறக்கூடியதே. இப்பொருளில் ரக்ஷணத்திற்கு பகவான் கர்மீபூதனென்பது பெறப்படும். வியாகரணத்தில் “कर्तृकर्मणोः कृति—கர்த்ருகர்மணோ: க்ருதி” என்பதொரு ஸூத்ரம். இந்த ஸூத்ரத்தினால்தான் இவ்விரு பொருள்களும் தேறுகின்றன. ரக்ஷணம் என்கிற சொல் कृदन्त [க்ருதந்த] மெனப்படும். இதற்கு முன்னேயுள்ள ஷஷ்டீவிபக்தியானது கர்த்தா என்கிற பொருளையும் கர்மம் என்கிற பொருளையும் வஹிக்கும். सर्वरक्षककर्तृकं रक्षणम् என்று கொண்டால் எம்பெருமான் நமக்குச் செய்யும் ரக்ஷணம் பொருளாகத் தேறும். सर्वरक्षककर्मकं रक्षणम् என்று கொண்டால் எம்பெருமானை நோக்கி நம் போன்றவர்கள் செய்யும் ர்க்ஷணம் பொருளாகத் தேறும்.

எம்பெருமான் நம்மை ரக்ஷிக்கிறானென்றால் பொருந்தும்; ஸர்வரக்ஷகனென்று அவன் பெற்றிருக்கும் திருநாமத்திற்கும் இது பொருந்தியிருக்கும். எம்பெருமானை நாம் ரக்ஷிக்கிறோமென்றால் இது பொருந்தாதே; எந்த நிலைமையிலும் நாம் அப்பெருமானுக்கு ரக்ஷ்யர்களேயொழிய ரக்ஷகர்களாயிருக்கத் தகுதியில்லையே!—என்று சங்கை பிறக்கும். அவன் நம்மை ரக்ஷிக்கும் விதம், நாம் அவனை ரக்ஷிக்கும் விதம் ஆகிய இரண்டு படிகளையும் இங்குத் தெளிவிப்போமாக. *ந ஹி பாலநஸாமர்த்த்யம் ருதே ஸர்வேச்வரம் ஹரிம்* என்பது முதலான பல ப்ரமாணங்களினால் ஸர்வேச்வரனொருவனே ஸர்வலோகரக்ஷணம் செய்யவல்லவன். ரக்ஷகர்களென்று ப்ராக்ருதர்களால் நம்பப்படுகிற மற்றையோர்கள் பக்ஷகர்களேயொழிய ரக்ஷகர்களல்லர்; பிள்ளை லோகாசார்யரருளிச் செய்த அஷ்டாதசரஹஸ்யங்களுள் ஒன்றான ப்ரபந்நபரித்ராணத்தில் இது அனேக த்ருஷ்டாந்தங்களைக் கொண்டு மூதலிக்கப்பட்டிருப்பது காணலாம். “ஈச்வரனை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம்” என்ற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியையும் ஸ்மரிப்பது. பத்த ஸம்ஸாரிகள், முமுக்ஷுக்கள், முக்தர், நித்யர் ஆகிய ஸகல சேதநவர்க்கங்களுக்கும் ஸர்வேச்வரனொருவனே அநிஷ்டநிவாரணமும் இஷ்டப்ராபணமுமாகிற ரக்ஷணத்தைச் செய்து போருகிறான். இதுதான் ஸர்வரக்ஷகன் செய்யும் ரக்ஷணம்.

இனி, ஸர்வரக்ஷகனை அப்பெருமானுக்கு நாம் செய்யும் ரக்ஷணமாவது என்னென்னில்; இதுதான் மங்களாசாஸனமெனப்படுவது. எம்பெருமான் ஸர்வரக்ஷகனாயிருக்கும்படியை மறந்து அவனுடைய ஸௌகுமார்யாதிகளையநுஸந்தித்து அஸ்தாநே பயசங்கைபண்ணி அவனுக்குக் காப்பிடுவதுண்டே [அதாவது பல்லாண்டு பாடுவது] இதுதான் ஸர்வரக்ஷகனுக்கு நாம் செய்யும் ரக்ஷணம். ஸ்ரீவசநபூஷணத்தில் “மங்களாசாஸநம் ஸ்வரூபவிருத்தமன்றோவென்னில்” என்று தொடங்கிப் பதினைந்து சூர்ணைகளினால் இவ்விஷயம் பரக்க வருளிச்செய்யப்பட்டிருப்பது காண்க. .... .... ....

ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசாரியரெழுதிய
மதுரோபந்யாஸமாலை முற்றிற்று.

ஸ்ரீ:.
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ தேசிக ஸஹஸ்ரநாம விமர்சம்.

## — இரண்டாவது ஆஹ்நிகம் —

### (இதற்கு முகவுரையாகச் சில விஜ்ஞாபனங்கள்)

67. இந்த விமர்சத்தின் முதலாஹ்னிகத்தை நாம் முன் மாதத்தில் வெளியிட்டோம். நமது தமிழ் நாட்டிலுள்ள உபய ஸம்ப்ரதாயஸ்தர்களும் [ஏறக்குறைய ஐந்நூறு வ்யக்திகள்] நமது வெளியீடுகளை அநுபவித்து வருவது வழக்கமாதலால், அவர்களில் ரஸிகர்களும் பண்டிதர்களுமாகவுள்ளவர்கள் தாங்கள் அநுபவித்த அம்சங்களை அப்போதைக்கப்போது ஹர்ஷ ப்ரகர்ஷத்துடன் தெரிவியாமலிருப்பதில்லை; இங்ஙனம் தெரிவிப்பவர்கள் உபய ஸம்பிரதாயஸ்தர்களுமேயானாலும், ஸ்ரீவரவரமுநி ஸம்பிரதாயஸ்தர்கள் சிலரேயாகவும், ஸ்ரீ தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களே பலராகவும் தேறுவர்கள். இது வஸ்துஸ்திதியுரைத்தலே யொழிய ஆத்ம ப்ரசம்ஸோக்தி யன்றென்பதை இதனை வாசிக்குமவர்களின் உள்ளமே யுணரும். ஐம்பது வருஷங்களுக்கு மேலாக நம்முடைய வெளியீடுகள் பத்ரிகாரூபேணவும் புஸ்தக ரூபேணவும் பிரசுரமாகி வருவதால் அந்நாள் தொடங்கியே ரஸிக பண்டிதோத்தமர்கள் ஆத்மவஞ்சனையில்லாமல் தம் தம் உள்ளத்தில் தோன்றும் உகப்பைப் பரவசர்களாய்த் தெரிவித்து வருவது பெரும்பாலும் தினப்படியாகவே நிகழும் நிகழ்ச்சியாகும். தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களாக வழங்கப்படுமவர்களின் உள்ளம் கன்றும்படியாகவும் நாம் சில நூல்களை எழுத நேருவதுண்டாதலால் அவற்றையுங்கூட அவர்கள் கொண்டாடித் தெரிவிப்பர்களோவென்று சிலர் கேட்கக்கூடும். நாம் எழுதுகிற விஷயங்கள் ப்ரமாணஸரணியைச் சிறிதும் கடவாமல் ஸம்ப்ரதிபந்நங்களாயிருந்தால், அவற்றைப் பார்ப்பவர்கள் ஆத்ம ஸாக்ஷ்யத்தை வஞ்சிக்கமாட்டாத ப்ராமாணிகர்களாயே யிருந்தால், ஹ்ருதயத்தில் தோன்றும் ஹர்ஷமும் அபரிமிதமாயிருந்தால் அவர்கள் கொண்டாடித் தெரிவிப்பதில் என்ன வியப்பு? விஷயதத்வங்கள் நெஞ்சில் பட்டாலுங்கூட அந்தரங்க ஸாக்ஷிகமான ஆனந்தத்தை மாச்சரியத்தினால் அபலபித்து தூஷிப்பவர்கள் அடியோடு இல்லை யென்று நாம் சொல்லுகின்றிலோம். அப்படிப்பட்டவர்களும் சிலருளர். லௌகிகதாக்ஷிண்யாதிகளாலே சித்த வ்ருத்தியை வெளிக்காட்டிக் கொள்ளகில்லாதவர்களும் சிலருளர். உலகர்களின் நிலைமை ஒரே விதமென்று யாரே சொல்லவல்லார்?

68. 'களவு செய்தால் கண்டிப்பாகப் பிடிபடுவோம்; பொய் சொன்னால் பங்கப் பட்டே தீருவோம்' என்று நன்கு அறிந்திருப்பவர்களுக்கும் விதிவசத்தாலே களவுத் தொழிலும் பொய் சொல்லுதலும் ப்ராப்தமாகிறாப் போலே, "அசைக்கவும் முடியாதபடி யெழுதப் படுகிற அண்ணங்கராசார்ய க்ரந்தங்களுக்குக் கண்டன மெழுதினால் அடுத்த நாளே அலமந்து நிற்போம்" என்பதை உள்ளபடி யுணர்ந்தவர்களுங்கூட "ஸமுத்ரேத்ரோபய நத்யா விஹித ஸ்நாநா ஸ்தீ" என்னும்படியான தன்மையினால் ஸஹஸா கண்டனமென்று ஒன்றை யெழுதிவிட்டுத் திணறி நிற்பதையுங் கண்டிருப்பதுண்டே. ஆகவே நமது நூல்களை எல்லாருமே அவிசேஷேண கொண்டாடுகிறார்களென்று நாம் சொல்லகில்லோம். பிறருடைய

கண்டனம் ஏறும்படியாக நாம் ஓரக்ஷரமும் எழுதுவதில்லை யென்பதை மட்டும் துணிந்து சொல்லவல்லோம்.'

69. நம்முடைய நூல்கள் ஸ்வஸம்ப்ரதாய வண்டனங்களினாலும் ஸாஸம்ப்ரதாய நிரூபணங்களினாலும் உலகுக் கெல்லாம் உபகாரகமாக அமைய வேண்டு மென்றும், கொண்டாட விரும்பாதவர்களான விபக்ஷர்களுங்கூட அவற்றைக் கொண்டாடும்படியான பாக்கியம் விளையவேணு மென்றும் ஆசைப்படுவது தகுதியற்றதன்று. இப்படிச் சிலர் ஆசைப்பட்டால் அவ்வாசை நிறைவேறப் பெறுவதாகத் தெரியவில்லை. என்னுடைய அநுபவத்தை நான் நிஷ்கபடமாகத் தெரிவிக்கிறேன் கேண்மின். என்னுடைய கண்ணில் படும் வியாஸங்களிலோ நூல்களிலோ அஸங்கதங்களான விஷயங்களிருந்தால், 'இவை அஸங்கதங்களே' என்கிற நிச்சயமுமுண்டானால் அவற்றை உலக நன்மைக்காக மறுத்திடாமலிருக்க முடிகிறதில்லை. ஸங்கதங்களையும் அஸங்கதங்களாக மருண்டு மறுப்பு வெளியிட்டு விட்டானிவன்—என்கிற அபக்க்யாதியை அடியேன் இதுகாறும் அடைந்ததில்லை. மஹர்ஷி யென்று மதிக்கப்பட்டு வந்த (வைகுண்டவாஸியான) ஸ்ரீமதுபயவே (மாம்பலம்) வாஸுதேவாசார்ய ஸ்வாமி ஒருவர்க்கும் அஞ்சாதவராய், அந்தரங்க ஸாக்ஷ்யத்தை அபலபிக்கமாட்டாதவராய் அடியேனுடைய மறுப்பு நூல்களைப் பற்றியுங்கூட எவ்வளவு ஸுஹ்ருஜ்ஜநங்களை வெளியிட்டிருக்கிறு ரென்பதை ஞாபக சக்தியுள்ள ஞானிகள் மறந்திரார்கள். இல்லை செய்யப் போகாதபடி அவை வேதாந்ததீபிகையிலும் ந்ருஸிம்ஹப்ரியாவிலும ஸ்தாவர ப்ரதிஷ்டை பெற்றுமிருக்கின்றனவே. மறைந்து போன அந்த ஸ்வாமியின் விஷயம் நிற்க;

70. திருவரங்கம் பெரிய கோயிலில் இப்போது ஆண்டவன் ஆஸ்தானத்தை அலங்கரித்தருளா நின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி தென்பரை யாண்டவன்ஸ்வாமியோடு அடியேனுக்குப் பரிசயமின்றிக்கே நேரில் ஸேவிக்கப்பெற்றதுமின்றிக்கே பத்ரவ்யவஹார ப்ரஸக்தியுமின்றிக்கே யிருந்த நாளில் (அதாவது 1951 ஞு முடிவில்) அந்த ஸ்வாமி ஸன்னிதியிலிருந்து அசிந்திதமாகக் கிடைத்த ஸ்ரீமுகத்தில் "தேவரீருடைய க்ரந்தங்களையும் வாக்விலஸிதங்களையும் ஸ்ரீ ஸ்வாமி கடாக்ஷித்தும் கேட்டும் மிகவும் உகந்தருளும்படி யாச்சுது. தேவரீருடைய க்ரந்தங்களை யெல்லாம் கடாக்ஷிக்க மிகுந்த குதூஹலமுண்டாகி யிருக்கிறது; அப்போதைப் போது அனுப்பிக் கொண்டிருக்கும்படியாக நியமனம்" என்று ஸ்ரீ கார்யதுரந்தரரால் எழுதப்பட்டிருந்தது. அந்த நியமனத்தை சிரஸா வஹித்து ஸ்ரீ ஸ்வாமியின் ருசியை யுணர்ந்து பத்தெட்டு க்ரந்தங்களை மட்டும் அனுப்பியிருந்தேன். வாத க்ரந்தங்களைக் கடாக்ஷிக்கவே ஆண்டவனுக்குத் திருவுள்ள மென்று தெரிந்து கொண்டு அவையும் சில அனுப்பியிருந்தேன். அவற்றை யெல்லாம் கடாக்ஷித்தருளி அடுத்த வாரத்திலேயே அநுக்ரஹித்தருளின ஸ்ரீமுகம் அப்போதே பத்ரிகைகளிலும் சில நூல்களிலும் பிரசுரமாகியுள்ளது;

" ஸ்ரீஜமஷாவாயஙிஸிம்ஷாவஸநாயிவதீத்ராஜி விரஷாஙுஙகுதாநா
வுதிவாஜிஉத்மஜஜஹயஙகுர கஷுீரவாணாஂ ஸ்ரீஉதாழ் ஸுணஜராவாயஙா
ணாழ் ....... வாஉவுதிவாஉ ரஹுஜாஙுஉயிமதழ். ஸ்ரீஉஷாவாயஙிவயஙாணாஂ
கடாக்ஷவாத்ராஂ வாஹவகூ. ஸவஙிஉாநவஞவஙா கடாக்ஷிதவஜோ
உஹாமஙுரவராஷேஷ ஸுஉஜாநஜதுஷிஙுஸாஞாஸஞ வவா வுஙமஙாஸாவ-
வஹாஸாதகஙிஸஹ்ஹாஹாநாஸாரிவுஉாணவாஜஉஜஞநு ஸஹுருஉய

[illegible — six lines of Sanskrit in Grantha script, ending "॥"]

71. இந்த ஸ்ரீமுகம் எவ்வளவு கனிந்து ஸாதிக்கப்பட்டிருக்கிறதென்பதை ஸாரஸ்வத ஸார வேதிகளே உணரமுடியும். நம்முடைய நூல்களுக்கு ஒரு மதிப்புரை தந்தருளவேணுமென்று நாம் அபேக்ஷித்ததில்லை. எதிர்பார்த்ததுமில்லை. “துர்விஜ்ஞாந ஸ்வஹ்ருதயமஹோ தைவமத்ர ப்ரமாணம்” என்று (பாதுகாஸஹஸ்ரே) தேசிகனருளிச் செய்தபடி எம்பெருமானுடைய திவ்ய ஸங்கல்பமேயடியாகத் தோன்றிய ஸ்ரீமுகமன்றோ இது. * யதார்ஹம் கேசவே வ்ருத்திம் அவசா: ப்ரதிபேதிரே * என்ற கணக்கில் இங்ஙனே பல பெரியார்கள் அபிநந்தனம் செய்யும்படியாகவே அடியேனுடைய ஒவ்வொரு நூலும் தோன்றியுள்ளது. ஆண்டவன் இங்ஙனே ஸ்ரீமுகமருளினதற்காக மாத்ஸர்யசாலிகள் சிலர் அந்த ஸ்வாமியைப் பர்யநுயோகம் செய்ததாகவும் “உங்களுக்குப் போலே அந்தரங்க ஸாக்ஷியத்தை வஞ்சிக்கவேண்டிய ஆவச்யகதை எனக்கில்லை” என்று ஆண்டவனருளிச் செய்ததாகவும் பிறகு கேள்விப்பட்டதுமுண்டு. கீழே விவரித்தபடி ப்ரளயமாக ஆண்டவன் அபிநந்தநம் செய்தருளினது ப்ரக்ருத தேசிக ஸஹஸ்ரநாம விமர்சம் போன்ற க்ரந்தங்களையே யொழிய வேறு வ்யாக்க்யாநாதிரூப க்ரந்தங்களை யன்று என்பதும் குறிக்கொள்ளத் தக்கது.

72. ப்ரக்ருத விமர்சத்தின் முதலாஹ்னிகத்தைக் கடாக்ஷித்தருளின ரஸிகவித்வன்மணிகளில் அறுபத்தைந்து திருநாமங்கள் ஹர்ஷப்ரகர்ஷ விஸ்மய விவசர்களாய் நீண்ட திருமுகங்களை அநுக்ரஹித்துள்ளார்கள். அவர்களின் திருநாமங்களை இங்கு நாம் ப்ரகாசநம் செய்தால் அந்த மஹநீயர்கள் வீணாகச் சில அஸூயுக்களின் வாக்கிலே அரைபடுவர்களென்று அஞ்சி, அவரவர்கள் தெரிவித்த ரஸவ ந ஸூக்திகளில் சிலவற்றை மட்டும் சுருங்க வெளியிட்டு மேல் விஷயத்திற் செல்வோம். இதன் கீழ் லக்கமிட்டு நாம் தெரிவிக்கும் வாக்ய ச்ரேணிகளெல்லாம் நிரூபண நிபுணர்களான அந்த ரஸிக பண்டிதர்களினுடையவை. அவரவர்கள் மிக விரிவாக எழுதியிருப்பவற்றை ஸங்க்ரஹித்ததே நமது பணி.

73. (1) அஷ்டோத்திரமென்றும் திருவேங்கிடமுடையானென்றும் எழுதுவது அஸங்கதமென்கிற இச்சிறு ஞானங்கூட இல்லாதவொருவரைப் பொருள்படுத்தியும் ப்ரதிபக்ஷியாகக் கொண்டும் தேவரீர் பலபல நூல்நுட்பங்களை வாரியிறைத்திருப்பது திருவேங்கடமுடையானுடைய ஔதார்யத்தையும் அதிசயித்ததென்றே சொல்லவேணும். (2) திருப்ரதிஷ்டைக்கும் ஸம்ப்ரோக்ஷணத்திற்கும் வாசியறியாதவொருவர் தேவரீரிடம் அகப்பட்டுக் கொண்டது உண்மையில் அவர்க்கு ப்ரதிஷ்டையே யாகிறது. (3) ஸ்ரீ தூப்புல்பிள்ளை யென்கிற ப்ரயோகத்தை யெடுத்துக்கொண்டு விமர்சிக்கையில் ‘தமிழ்ச்சொல்லோடு ஸ்ரீ சப்தத்தைச் சேர்ப்பது விரஸம்’ என்று தேவரீர் எழுதியிருப்பதைப் பற்றிக்கொண்டு சிலர், ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீவில்லிபுத்தூர் என்னும் வ்யவஹாரங்கள் எப்படி? என்று சர்ச்சிக்க வந்தார்கள்; அவர்களை தேவரீருடைய ஸ்ரீஸூக்தி விந்யாஸத்தைக்கொண்டே கைகூப்பிநிற்கச் செய்தேன். (4) பக்தியின் பரிவாஹத்தால் ஸ்துதித்தாரென்றெழுதுவது தவறென்று விளக்கியிருப்பது ஆழ்ந்த

விவேகத்தின் காரியம். இதைப் புரிந்துகொள்ளவும் எதிர்த்தலையில் அதிகாரிகளில்லையே. (5) தேசிகன் நூற்றிருபதாவது திருநக்ஷத்திரத்தில் பரமபதித்தாரென்றெழுதிய முகவுரை காரர்க்கு நூறுவது திருநக்ஷத்திரமென்றே விவக்ஷிதமாயிருக்கலாகாதோ? தாம்கொண்ட ஸஹஸ்ரநாமத்தில் *அசீதி ஸஹஸ்ரமென்றதற்கு எழுபத்துநாலாயிரமென்று பொருளெழுத இவர் அவதரித்ததுபோல், 120 என்கிற இவருடைய வார்த்தைக்கு 100 என்று பொருளெழுத ஒருவர் அவதரிக்க முடியாதோ?

74. (6) வித்யாரண்யர் கோபத்தினால் சததூஷணியை வரவழைத்துக்கொண்டு அதில் ஒரு அகாரத்தின்மேல் குத்துப்போட்டதாக அசட்டுக்கதை யெழுதினவர்க்கு நல்ல குத்தும் குட்டும் கிடைத்தது. முகவுரைகாரரோ அவரைச் சேர்ந்தவர்களோ எழுதுகிற கதைகள் எல்லாமுமே ஸ்வகபோல கல்பிதமென்று கல்வெட்டாக்கப்பட்டிருக்கும்போது ஒரு கதை விஷயத்தில் ஸ்வகபோலகல்பித மென்றெழுதியது என்னே? (7) ஆசார்யசம்பூகாரர் நவீனர் களின் ஸங்கேதத்தில் கலந்து கொள்ளாமல் தேசிக வைபவத்தை எழுதினபடியால்தான் அவர்க்கும் அவருடைய நூலுக்கும் மதிப்பு ஏற்படாமல்போயிற்று. இதை அவர்கள் ஸாவ்யக்தமாகவும் சொல்லுகிறார்கள். (8) நவீனர்கள் சொல்லியும் எழுதியும் வருகிற கதைகளுக்கு மூலாதாரமான க்ரந்தம் எதுவும் கிடையாதென்பதை அவர்களே ஒப்புக்கொள்ளு கிறபடியால் இங்கு ஸித்தஸாதநம் தோஷம் என்று சொல்லுகிறார்கள். இந்த தோஷத்தை தேவரீர் பரிஹரிப்பதெப்படி? (9) ஆசார்ய சம்புவிலுள்ள கதைகளுக்கு விபரீதமான வரலாறுகளையும், அதில் ஈஷத்தும் தொடப்படாத கதைகளையுமே நவீனர்கள் சொல்லுவதும் எழுதுவதுமாயிருக்கிறார்களென்பதை தேவரீர் எத்தனை தடவை எழுதினாலும் இது அரண்யருதிதமே. (10) அக்காலத்தில் சிலர் பாதரக்ஷையைக்கட்டி தேசிகன் திருமுடியிலே படும்படி தொங்கவிட்டார்களென்றும், ச்ராத்தத்தில் நிமந்த்ரிதர்கள் வஞ்சித்து விட்டார்களென்றும், திருவடிகளைப் பிடித்திழுத்துத் தெருவிலே விழவிட்டார்களென்றும்.......இப்படியாகச் சொல்லப்படுகிற கதைகளினால் தேசிகனுக்கு லாகவமே தேறுகிறதென்றும், இக்கதைகளினால் ஒரு லாபமுமில்லையென்றும் தேவரீர் நினைத்தாலும், இந்த அதர்க்கணச் செயல்களெல்லாம் தென்கலையாருடைய தூர்ப்போதனையினால் நிகழ்ந்தவை யென்று ஸ்தாபிக்கப் பார்ப்பவர்களுக்கு என் லாபமில்லை. இக்கதைகளினால் தேசிகனுக்கு கௌரவமாலாகவமா? என்பதில் நோக்கில்லை; தென்கலையார் ஆதிகாலத்திலிருந்தே தேசிகனை ஹிம்ஸிப்பவர்களாயும் பரிபவப்படுத்து கிறவர்களாயுமிருந்தார்கள் என்பதை ஸ்தாபிப்பதில்தான் எங்களுக்கு நோக்கு என்கிறார்கள்.

75. (11) தேவரீர் விமர்சத்தில் 17-வது பாராவில் "இவர்களுடைய ஸம்ப்ரதாயத்தில் வித்வான்களுக்கு துர்ப்பிக்ஷமில்லையே, விமர்சகுசலரானவொரு சிறந்த வித்வானுக்குக் காண்பித்துக் குற்றங்குறைகளைக் களைவித்து வெளியிட்டிருக்கலாகாதா?" என்றெழுதியிருப்பதைப்பற்றிச் சிலர் சொல்லுவதென்னவென்றால், "பல வித்வான்கள் கூடிப் பரிஷ்கரித்தே இந்த ஸஹஸ்ரநாமத்தை வெளியிட்டார்கள்; ஏகாகியாகச் செய்த காரியமன்று; ஆனாலும் * அதஸ்ஸஹஸ்ராணிப்படியே ஆகிறது; இதற்கு நாம் என்ன செய்யமுடியும்; ஒரு தலையில் * சதுர்தச ஸஹஸ்ராணி * என்னும்படியாகவும், மற்றொருதலையில் * ஷட்ஸஹஸ்ராணி * என்னும்படியாகவும் நின்றால் இதற்கென்செய்வது?—என்கிறார்கள். இது ப்ராமாணிக வார்த்தையாக எமக்குத் தோன்றியது. (12) திருக்குடந்தை கோபாலதேசிகனென்பவர் சிறந்த அநுஷ்டாதா; நித்யம் த்ரிகால ஸ்நாநம் செய்துகொண்டு லோகவிலக்ஷண பரமைகாந்தியாக எழுந்தருளியிருந்தவர். விசேஷித்து ஸ்ரீபாஷ்யத்தில் மஹாகுசல

ரென்று ஊஹித்தி. வித்வத் கோஷ்டியிலே பரிகணிதரல்லர்; அவருடைய திருவாக்குக்கள் கேவலம் பக்தி ப்ரபாவ ப்ராதுர்ப் பூதங்களாகையாலே "அத்யந்தபக்தியுக்தாநாம் நைவ ஶாஸ்த்ரம் நசக்ரம:" என்கிற ரீதியிலே அவதரித்த அந்த திருவாக்குக்களிலே அவத்யங்கள் காட்டுவது தகவேதகாது—என்று சில மஹான்கள் சொல்லுகிறார்கள். சில ஸம்வத்ஸரங்களாக இவ்விடத்திலெழுந்தருளியிருக்கின்ற மஹாபண்டிதரான ஸ்ரீமதுபயவே. காளி ரங்காசார்ய ஸ்வாமியும் *வ்ரஜாஷே ந விசாரணீய அமிதாஃ* என்று ஸாதிக்கிறார். ஆனால் இதை தத்பக்ஷீயர்கள் எல்லாரும் ஏகமுகமாக இசைந்திடுவர்களா என்பதுதான் ஸந்தேஹமாயிருக்கிறது. (ஸ்ரீமத் காளி ரங்காசார்ய ஸ்வாமியின் ஸ்ரீமுகம் அடியேனுக்கு நேராகவும் கிடைத்திருக்கிறது; மேலே விவரித்தபடியாகவே அந்தஸ்வாமி எழுதியுள்ளார்.

76. (13) தேவரீருடைய விமர்ஶத்தில் (19–பாராவில்) "வித்வான்களாயுள்ளவர்கள் இந்த ஸஹஸ்ரநாமஸ்துதியை வாசித்துப் பார்த்திருக்கமாட்டார்களா? பார்த்தும் ஹாஹாகாரம் செய்யாமல் வாளாவிருக்கின்றார்களென்றால், உலகில் விஸ்மயநீயமோ ஶோசநீயமோ இதிற்காட்டிலும் வேறில்லையே" என்றெழுதியிருப்பதைக் கண்ட சிலர் என்ன சொல்லுகிறார்களென்றால் "காக்கைக்குத் தன்குட்டி பொன்குட்டி" என்கிற வசனம் இவர்க்குத் தெரியாதா என்கிறார்கள். ஹாஹாகாரம் செய்யவேண்டும்படியாய் சேராச்சேர்த்தியான கூரவஜ்ரம் உலகில் எவ்வளவோ நேர்கின்றதே; இதற்கு யாரேனும் ஹாஹாகாரம் செய்வதுண்டோ? * ஜாதோ தைவாத்‌ஜித இவ பூநாஸம்வியாதா வியாதா * என்று தானே சொல்லுகிறார்களென்கிறார்கள். (14) காளிதாஸ தசஸஹஸ்ரநாமாவளியைப் பார்த்துப் பலர் விஸ்மய ஸ்திமிதராகிறார்கள். இது அச்சிடப்பட்டிருப்பது இதுவரை அப்ரஸித்தமாகவே யிருந்தது. இப்போதே இதைத் தெரிந்து கொண்டு பலரை விசாரித்து நிர்ணய ஸாகர காவ்யமாலாவில் வெளிவந்திருப்பதறிந்து பலர் அதை வாசித்துக்களிக்கிறார்கள். ஆனால் பாட பேதம் மிகவும் காண்கிறது. முதல் ச்லோகம் * வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தாவிதி வாக்ருத்யூஜாயக: * என்று தேவரீர் காட்டியபடி இல்லை; * வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தாவிதி ஶாஷாவரவ்யூஹ: * என்று காண்கிறது. இப்படி அனேகமாய் பாடபேதம் காண்கிறது. இதனால், தேவரீருக்குக் கிடைத்த பதிப்பு வேறாயிருக்கவேணு மென்று நிச்சயித்து அந்தப் பதிப்புக்கு விலாஸம் தெரிந்து கொள்ளப் பலர் விருப்புகிறார்கள். இந்த காளிதாஸ நாமாவளியைக் காட்டியிருப்பது ஸாதர்மியத்ருஷ்டாந்தமாகவா? வைதர்மியத்ருஷ்டாந்தமாகவா; என்பதையும் தெரிவிக்கவேணுமாம். தோஷலேஶவிரஹிதமான இந்த நாமாவளிக்கும் தோஷ ஜடிலமான ப்ரக்ருத ஸஹஸ்ரநாமத்திற்கும் ஒரு ஸம்பந்தமுமில்லாமையாலே இது அஸம்பத்த உதாஹரண மென்று தூஷிக்கிறார்கள். தேவரீர் (22-வது பாராவில்) "விவக்ஷிதார்த்தத்தை விளங்கக் காட்டாமலும் வ்யாகரண சாஸ்த்ரஜ்ஞர் வெறுக்கும்படியாகவும் முதல் ச்லோகம் அமைந்திருப்பது போலவே மூற்றும் அமைந்துள்ளது; 1008 திருநாமங்களில் ஒரு நூறு திருமாமங்கள் நிர்துஷ்டமாகத் தேறக்கூடும்" என்றெழுதியிருப்பதைப் பார்த்தவர்கள் அப்படி நூறு திருநாமமாவது நிர்துஷ்டமாகத் தேறக்கூடுமா வென்று மெனக்கிட்டுப் பரீக்ஷித்துப் பார்க்கையில் தேறவில்லை யென்று தெளிந்து, இப்படியிருக்க 'ஒரு நூறு திருநாமங்கள் தேறக்கூடும்' என்று எப்படி யெழுதப்பட்டதென்று பெரிய களேபரமுண்டாயிற்று; உடனே ஒரு பெரியவர் வந்து "அவையும் அசடு பிசடு தட்டியேயிருக்கும்" என்று அவ்விடத்திலேயே தேவரீ ரெழுதியிருப்பதை யெடுத்துக் காட்டி ஸமாதானம் பண்ணினர். மற்றொரு

வர் வந்து, அயிகாரிவிவெகஜ்ஞ:, யதிமுக்ஷவிவெதக:, ஸுமெவக ஹேதா, ஊயிவஸ்த்ர ஸுபாயக:, காவ்யாமுகாரதக்ஷ:, க்விதாகிமுககெஸரீ, வராஹகஸவஷாஸக:, வரகா மூவிஜ்ஞ:.......என்றிப்படி முப்பது திருநாமங்களை யெடுத்துக் காட்டி இவற்றில் விவக்ஷிதார்த்தத்தை விளங்கக் காட்டாமையாகிற குற்றமும் சொற்குற்றமும் இல்லையே, அசடுபிசடாகவுமில்லையே; இந்த முப்பது திருநாமங்களுக்காவது மதிப்பு கொடுக்கலாகாதா? என்று மன்றுடினர். இதைப்பற்றி ஆலோசனை நடந்து வருகிறது.

77. (15) ஆக்ஷபாதீய மென்கிற ப்ரயோகத்தை தூஷிக்கையில் "ஆக்ஷபாத மென்று வது ஆகும், அக்ஷபாதீய மென்றுவது ஆகும்; ஆக்ஷபாதீய மென்றுகாது" என்றெழுதி யிருப்பதற்கு * அயிகரணெ ஜாயிகம் ஸமு * என்றதைக் காட்டிச் சிலர் ஸமாதானம் பண்ணு கிறார்கள்; * அயிகம்தஸ்ய வஷிஷ்டா நதஜாநயெ * என்கிற நையாயிகந்யாயத்தையும் நிரூபிக்கிறார்கள். ராஜெணாஹூாம் என்றும் ஜ்ஞாநவஷ்யோ: என்றும் ப்ரயோகங்களிருப்ப தாகச் சொல்லுகிறார்கள். இதை விமர்சிக்கவேணும்.

78. (16) **க்ருதகஜ்ஞகமாய: கஷயாஸதகவீணா மீ—நிவிஹெஷஷஜ்ஞஜி ஜ்ஞா—யஜ்ஞாதிஷஹவிவிதி—ஸஜ்நாத்ராயக்ஷரோஸாஹெ — ஸம்வித்வெத ஹாஸா யஷ—ஷஹாநஜக்ஷ்யதி நிர—ஸகஷாஸக விவெகாஜீ—அயதக்ருதவாதிக—வெ ஹிம்ஸா ஹிம்ஸதாஷாவ**—இப்படிப்பட்ட ரசனைகள் பல நூற்றுக் கணக்கிலிருப்பதைக் காட்டியிருப்பதற்கு ஒரே பதில் சொல்லலாமென்று தோன்றுகிறது. அதாவது, பகவத் கீதைக்கு மத்வாசார் பாஷ்யம் பண்ணுகையில் மங்கள ச்லோகத்தில் * வரிவஷணம் ஜஹஷம்ஸூாந மீ—தாயஷ்வக்ஷாதி ஜெமத: * என்று உத்தராயஷம் அமைத்தார். அ என்று வ்யாஸருக்குப் பெயராம்; அவர் பூஜ்யராகையாலே பூஜாயாம் பஹவசநம் ஆந் என்பதாம். பூஜ்யரான வ்யாஸரை என்று அர்த்தமாம். முதற் பாதத்தின் முடிவில் (மீ) என்று போட்டார். மேல் பாதத்தில் (தாயஷம்) என்றார். டீகாகாரர் "நதாத்ர யதி ஹமெ தொஷ:; தஸ்ய காவ்யவிஷயக்ஷாக; ஸாஷ்ரெ * யவாயிம ரமதி ஸா—யெ ஸம்ப ஸவிஹெஷணெ ஐதி...." என்று எழுதிவைத்தார். வக்ருதத்தில் அப்படிச் சொல்ல வேண் டாம். யதிஹம மென்பது ஏகதண்டியதி விஷயமேயொழிய த்ரிதண்டியதி விஷயமன்று. அப்படியே கொண்டாலும், இந்த நாமாவளீ கர்த்தாவுக்கு ஆசார்யர் ஒரு யதி; சிஷ்யர் களான யதிகள் மூவர்; ஏக காலத்தில் யதிகள் நால்வர்க்கும் ஸங்கம் வாராது; ஒருவர்க்கு வந்தால் மற்ற மூவர் அதை நிரஸித்து விடுவர்கள். ஆகவே யதிஹமெ ந தொஷாய. என்று சொல்லி விடலாம்—என்று எமக்குத் தோன்றினதைச் சொன்னேன். எல்லாரும் ரஸித்தார்கள். * ஷிகெஷதிரஷிஷ்டஜநாக்ஷணதக்ஷிணெதித்யாதி ஸங்கல்ப ஸூர்யோதய ஸ்ரீஸூக்தியினால் யதிகளுக்கு ஹமத்தை தேசிகனே காட்டியிருப்பதால் யதிஹமெ ந தொஷாய.

79. (17) "பொறுக்கமுடியாத தலைவேதனை" என்றும் 'இதற்கு அழுவதா சிரிப்பதா?" என்றும் இப்படி விமர்சத்தில் பலபல காண்கிறோம். ஒன்றிரண்டிடங்களில் தலைவேதனை யானல் இப்படி எழுதலாம்; முற்ற முடியவும் தலைவேதனையாயிருக்கும்போது ஓரிடத்தை எடுத்துக்காட்டி இப்படியெழுதினால் மற்ற விடங்களில் தலைவேதனை இல்லைபோல் அர்த்த மாகிறதே. ஏனிப்படி எழுதிற்று. அழுவதா சிரிப்பதா? என்கிற கேள்வியும் யுக்தமாக இல்லையே. அழுகையும் சிரிப்பும் புருஷதந்த்ர மல்லவே. அழுகைவந்தால் அழுவது; சிரிப்புவந் தால்சிரிப்பது; இதற்குக் கேள்வி என்ன?(18) "விம்சத்பத ஸ்ருஷ்டியில் விலக்ஷணஸாமர்த்தியம்"

என்றதைப்பற்றி ஒரு விவக்ஷை. *விம்ஶத்யஷ்டாதிகஶதம்........என்றே மூலகாரர் இயற்றியிருந்தாலும் முகவுரையெழுதி முத்ரணம் செய்வித்த மஹான் *விம்ஶத்யுத்தராதிகஶதம்....... என்று திருத்தியிருக்கக்கூடாதா? பகல்கண்ட குழியிலே இராவிழுவது ஸஹஜம்; பகலிலேயே விழுவதுதான் வியப்பு.

80. (19) விமர்சத்தில் (30 வது பாரா முடிவில்) "வேலையற்றவரும் இந்த வேலை செய்யத்தகாது" என்று முகவுரைகாரரைப்பற்றி எழுதியுள்ளது; இந்த வேலை அவ்வளவு அஸமஞ்ஜஸமான வேலையாகத் தோன்றவில்லையே. தங்களுடைய ஸம்பிரதாயத்தில் ஆசார்யபீடம் வஹிக்கின்ற ஆரியர்கள் இப்படிப்பட்ட ப்ரஜ்ஞாஹீனர்களென்று காட்டுவது அவசியமான வேலையல்லவா? இதைச் செய்ததில் என்ன பிசகு? (20) 32 ஆம் பாராமுடிவில் "அவலக்ஷணப்ரயோகங்களையே அடுத்தடுத்துப் பண்ணக்கடவேன் என்று ஸங்கல்பமோ சபதமோ ப்ரதிஜ்ஞையோ செய்துகொண்டு இந்த ஸஹஸ்ரநாம ஸ்துதி செய்யப்பட்டதாக" எழுதியுள்ளது. பெரிய ஆசார்ய பதவியை வஹிக்குமவர்கள் இப்படிகூட ஸங்கல்பமும் சபதமும் ப்ரதிஜ்ஞையும் செய்து கொள்வர்களா? ஈதென்ன வார்த்தை! என்று சிலர் சொல்லவந்தார்கள்; அவர்களை நான் கேட்டேன்—அப்படியில்லையானால் அவலக்ஷண ப்ரயோகங்கள் திருநாமந்தோறும் காணப்படுவதற்கு என்ன கதி சொல்லுகிறீர்கள்? என்று கேட்டேன்; அதற்கு ஒரு நிபுண பண்டிதர் சொன்னார்; ப்ரஹ்மஸூத்ரபாஷ்யமியற்றிய மத்வாசார் முதல்ஸூத்ரபாஷ்யத்தில் "ஸ்வதந்த்ரோ ப்ரஹ்மஶப்தோ விஷ்ணவி" என்றாராம். இங்கு மூலத்திலுள்ள ப்ரஹ்மசப்தம் விஷ்ணுவைச் சொல்லுகிறதென்று அர்த்தமாம். விஷ்ணௌ என்னவேண்டியிருக்க, விஷ்ணவி என்று எப்படி யெழுதினார்? என்று சங்கித்த டீகாகாரர் "ஸ்வஸ்ய ஸர்வஜ்ஞத்வம் ஸ்வதந்த்ரஸ்ய குரோஶ்சாஸ்வதம் ஸூசயிதுமாஹ—விஷ்ணவீதி" என்றாராம். தன்னை எல்லாரும் மஹர்ஷியென்று சொல்லுவதற்காகவும், தனது நூலை ஆர்ஷமென்று கொண்டாடுவதற்காகவும் அபசப்த ப்ரயோகம் பண்ணினாராம் மத்வாசார். கோபாலதேசிகனும் அதே கருத்தினால்தான் அபசப்த ஜடிலமாக நாமாவளியை எழுதிவைத்தார். இதனால் அவருடைய ஞானத்தில் குறை சொல்லவே கூடாது—என்று. பரிமாணம், பரிமளம், பரிசுத்தி, அதிகரணம் அநிர்வசம்........என்றிப்படிப்பட்ட அவலக்ஷண அபசப்தங்களைப்பற்றி இப்படி கதிகல்பிக்கலாமானாலும், ஸ்ரீதேசிகஸூக்திகளுக்கும் பட்டர் ஸூக்திகளுக்கும் பகவத்கீதா ஸூக்திக்கும் கண்டனமான நாமாவளிகள் அநேகம் காணப்படுகிறதே; ஸ்ரீபதம் உபலக்ஷகம் என்பதுபோன்ற அஸதுக்திகளும் பல காணப்படுகிறதே; சுஷ்கவாக்ஜாலபுஞ்ஜங்களும் பலவுளவே; இவைகளுங்கூடவா ஆர்ஷத்வஸித்திக்காக எழுதப்பட்டனவென்று கேட்டால் ஆர்ஷத்வஸித்தி மட்டும் போதுமா? ஸர்வஜ்ஞத்வஸித்தியும் வேண்டாமா? என்கிறார்கள்.

81. (20) முநித்ரய ஸம்ப்ரதாய மென்பதற்கு கோபால தேசிகனை ஆச்ரயித்த யதிகள் மூவர் வழியாக வந்த ஸம்ப்ரதாய மென்பதுதான் உண்மையான பொருளென்றும், வேறு விதமான பொருள் சொல்லுவது யுக்தமன்றதா னென்றும் ஜ்ஞானவயோவ்ருத்தர்கள் பலர் கூறுகின்றார்கள். நவீனர்களுங்கூட அசட்டுச் சிரிப்புடன் இதையே ஆமோதிக்கிறார்கள்; ஏதோ தமாஷாக எழுதினதாகவும் சொல்லுகிறார்கள். * அரக்கரசுரர் பிறந்திருள்ளீரேல் * என்ற திருவாய்மொழிப் பாசுரத்திற்கு மடத்தாரும் முநித்ரயத்தாரு மென்று உரை செய்திருக்கிற வியாக்கியானம் 200 ஆண்டுகட்கு உட்பட்டதாகவே யிருக்கவேண்டு மென்கிறார்கள். இது ஏகதேசத்வேஷம் அங்குரிக்கத் தொடங்கின காலத்தில் எழுதப்பட்ட

தாயிருக்கவேணு மென்பது உசிதமான ஸம்பூதிபத்தி. (21) * ஜொடூஷா வஷூஜெ தாமி வதகார அநூஹவெ * என்கிற ச்லோகத்தை வாசிப்பவர்கள் யாவரும் வயிறு வெடிக்கச் சிரிக்கிறார்கள். ச்லேஷயமகங்களுக்கும் எளிதாகப் பொருள் சொல்லிவிடலாம். இதற்குப் பொருள் கண்டுபிடிக்க ஸர்வேச்வரனாலுமாகாது. ச்லோக மெழுதினவரே தான் ச்லோகார்த்தமும் சொல்லியிருக்கவேண்டும். இந்த ச்லோகம் தேசிக ஸஹஸ்ரநாம கர்த்தாவே செய்திருக்கவேண்டு மென்று உறுதியாகச் சொல்லலாம். சைலியைக் கொண்டு கண்டுபிடிப்பது வ்யபிசரிப்பதில்லையன்றோ. இது ஹாஸ்யரஸத்திற்காக வேணுமென்று பண்ணின ச்லோகமாகத் தோன்றவில்லை; இயற்கையாகவே அமைந்தது. (21) * லோகாசார்யாதி ஸச்சிஷ்ய ஸ்ராவித ஸ்ரீபாஷ்யகஃ * என்று திருநாம மியற்றினவருடைய அபிப்ராயம்— பிள்ளை லோகாசார்யர் முதலானோருடைய ஸச்சிஷ்யர்களாலே உபதேசிக்கப்பட்ட ஸ்ரீ பாஷ்யத்தையுடையவர் தேசிகன் என்பதுதான். இந்த நாமகர்த்தா வேறு விதமான பொருளை விவக்ஷித்தவரல்லர். அது எப்படித் தெரிகிற தென்றால் (174) * ஸ்ரீரங்கநாயகதத்த ஸ்ரீவேதாந்தாசார்ய நாமகஃ * (175) * ரங்கநாயகீதத்த ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ர பூஷிதஃ * என்று இவரே பணித்திருக்கிறார். இந்த நாமங்களில் "ஸ்ரீ ரங்கநாதனாலே கொடுக்கப்பட்ட" என்றும் "ஸ்ரீ ரங்கநாச்சியாராலே கொடுக்கப்பட்ட" என்றும் இப்படித்தானே பொருளை விவக்ஷித்திருக்கிறார். ஸ்ரீரங்கநாதனுக்கு வேதாந்தாசார்ய நாமத்தைக் கொடுத்தவர் தேசிகன்; ஸ்ரீரங்கநாச்சியாருக்கு ஸர்வதந்த்ரஸ்வாதந்திரியத்தைக் கொடுத்தவர் தேசிகன் என்பதாகச் சொல்லுகிறானன்றோ. ஸ்ராவித தத்த சப்தங்கள் பர்யாயங்களே யாதலால் லோகாசார்யாதிகளினுடைய ஸச்சிஷ்யர்களாலே ஸ்ரீ பாஷ்யார்த்தமளிக்கப் பெற்றவர் தேசிகன் என்கிற உண்மையான பொருளையே கோபால தேசிகன் வெளியிட்டிருக்கிறார். இதற்கு விபரீதார்த்தம் எழுதினவர் முகவுரைகாரரே யாதலால் அதைக் கண்டித்தது நியாயம். கோபால தேசிகன் இங்கு பூஜிக்கத்தக்கவரே.

82. (22) ஸ்வாமிந்!, தேவரீர் விமர்சம் (58 பாராவில்) "D. T. தாதாசார்யரே யதார்த்தக்ராஹி" என்று மகுடமிட்டு எழுதியிருக்கும் விஷயம் முதலில் பலர்க்கு விளங்கவில்லை. தேவரீருடைய ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரனில் (பக்கம் 30 ல்) 69, 70 பாராக்களை முன் பின் பாராக்களோடு சேர்த்து வாசித்துப் பார்த்ததில் இவ்விஷயம் வெகு விளக்கமாகப் புரிந்தது. அந்த D. T. தாதாசாரியரை ஸயூத்த்யர்கள் பலரும் "ஓய்! இப்படி யெழுதி வைத்து நம்முடைய ஸம்பிரதாயத்தைக் குட்டிச் சுவரும் கொல்லைமேடுமாக ஆக்கிவிட்டீரே; ரகுவம்சாதி விமர்சத்தோடு நில்லாமல் துறையல்லாத துறையிலேயிழிந்து இப்படி யார் உம்மை எழுதச் சொன்னது?" என்று வெருட்ட, அதற்கு அவர் "உண்மையை ஒளிக்க முடியாமல் எழுதிவிட்டேன்; இனி அதனை நானே கண்டிப்பதென்றால் உலகம் சிரிக்கும்; இனி நான் பேனாவைத் தொடாது நின்று விடுகிறேன்" என்று சொல்லிப் போனாராம். இப்படி ஒவ்வொருவர் ஒவ்வொன்றை யெழுதிவைத்து வலுவில் மாட்டிக்கொண்டு திண்டாடுவது அந்த பரம்பரையில் வழக்கமாய் விட்டது. (23) நவீனர்கள் தேசிகனோடு ஸம்பந்தத்தை மிகவும் நவீந காலத்திலேயே ஆவாஹநம் செய்து கொண்டவர்களென்றும், தேசிகன் காலந்தொட்டு அநுஸ்யூத பரம்பரையாக வந்தவர்களல்லரென்றும் தேவரீர் பல நூல்களில் எழுதியிருக்கின்றது. இதுவரையில் இதற்கு ஒருவரும் பதிலெழுத நெஞ்சாலும் நினைத்ததில்லை. தேசிகன் ஸாதித்த மஹா கடினங்களான க்ரந்தங்களுள் ஒரு க்ரந்தத்திற்கும் இவர்களின் முன்னோர்கள் வியாக்கியானம் செய்தவர்களல்லாமையாலும், ஸ்ரீமத் ரஹஸ்ய

த்ரயஸாராதிகளான அத்யாவச்யக க்ரந்தங்களுக்கும் முற்காலத்தில் வியாக்கியானம் அடியோடு அவதரியாமல் மிகவும் பிற்பட்ட காலத்திலேயே அசடு வழிகிற வியாக்கியானங்களை நவீநர்கள் எழுதிவைத்திருப்பதாலும், மற்றும் தேவரீர் நிரூபித்துள்ள பல ஹேதுக்களாலும் "நவீந காலத்தில் தான் நாங்கள் தேசிக ஸம்பந்தத்தை ஆவாஹநம் செய்து கொண்டோம்" என்பதை அவர்கள் இசைந்து தீரவேண்டியது அவர்ஜநீயமாகிறது. அப்படியே இசைந்து கொண்டு இப்போது என்ன சொல்லுகிறார்களென்றால், "ஸதாசார்ய ஸம்பந்தத்தை என்றைக்குப் பெற்றாலென்ன? தேசிகன் உத்தமமான ஆசார்ய ரத்ன மென்பதில் ஸந்தேஹமில்லையே; அவருடைய ஸம்பந்தம் நமக்கு உத்தாரகம் என்று என்றைக்குத் தோன்றுகிறதோ, அன்றைக்கு அந்த ஸம்பந்தத்தைப் பெறுவதனால் என்ன குறையாகும்? அநாதியாக பகவத் ஸம்பந்தமில்லாதவர்கள் இன்று அதைப் பெற்று உஜ்ஜீவித்துப்போவதில்லையோ? அப்படிப்பட்டவர்கள் "திருமாலே! நானுமுனக்குப் பழவடியேன்" என்று சொல்லிக் கொள்வதில்லையோ. அதுபோல நாங்களும் இரண்டொரு நூற்றாண்டாகவே தேசிக ஸம்பந்தத்தை ஏறிட்டுக்கொண்டவர்களாகிலும் இதனாலெங்களுக்கு ஏற்றமேயொழியத் தாழ்வொன்றுமில்லையே" என்கிறார்கள். இதற்கும் தேவரீருடைய நூல்களிலேயே விரிவான உத்தரம் இருந்தும் அதை அவர்கள் கவனிக்கவில்லையேயென்று வருந்தி அடியேன் அவர்களுக்கு விரிவாகச் சொல்லிவருவது என்னவென்றால்,

> தேசிகனோடு ஸம்பந்தத்தை என்றைக்கு ஏறிட்டுக்கொண்டாலும் புகழேயல்லது பழிப்பில்லையென்பது வாஸ்தவம். நவீனமாக அதை ஏறிட்டுக்கொண்ட நீங்கள் தேசிகனுக்குப் புராதனமாகவுள்ள * ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய தனியனிலே அநாதரவுகாட்டுவதும், புதிதாகவொரு பாத்ரத்தனியனையும், வைக்கோல்கற்றையை மெல்வதுபோன்ற வாழி நாமங்களையும், சில பல கட்டுக்கதைகளையும் ஸ்ருஷ்டித்து ஸம்ப்ரதாயத்தில் மஹத்தான க்ஷோபத்தையுண்டாக்கிப் பல விடங்களில் பார்லிமெண்டுவரையில் போய்வரும்படியான வழக்குக்களைக் கிளப்பி வீணை க்ஷாத்திரங்களை வளரச்செய்து....... இப்படியாக அனர்த்த பரம்பரைகளுக்கு ஹேதுவாகாமலிருந்தால் உங்களுடைய தேசிகபக்தி மிக மெச்சத்தகுந்ததாகவேயிருக்கும்; எடுத்ததற்கெல்லாம் சண்டையாகவன்றோ உங்கள் போதுபோக்கிருப்பது. இதுவா தேசிகபக்தி?

என்று விஸ்தாரமாகச் சொல்லுகிறேன். இதற்கு வாய்திறக்க வழியேது. தேவரீர் நூற்றுக்கணக்கான புத்தகங்களில் எவ்வளவோ விளக்கமாக எழுதியிருப்பவற்றுக்கு வாயைக் கையைத்திறக்கமாட்டாதவர்களன்றோ இவர்கள். பசுபக்ஷ்யாதிகளுக்கு வெட்கம் மானம் எதுவும் கிடையாதென்றும் மனிதர்களுக்கே அவையுள்ளதென்றும் வைத்துக்கொண்டிருக்கிறோம். அந்தோ இது நடத்தையில் இல்லையே. வெட்கமிருந்தால் பல நூறுதடவைகளில் பங்கப்பட்டொழிந்த விஷயங்களையே ஒருவர் மாறியொருவராகத் திருப்பித் திருப்பியெழுதிக் கொண்டு போதைப்போக்குவர்களா? * [illegible] * என்கிற சாகுந்தலச்லோகத்தை தேவரீர் எடுத்துக் காட்டியிருக்கிறதே; இதற்குக்கூட லஜ்ஜிக்கமாட்டாதவர்களாகவன்றோ இருக்கிறார்கள். இப்போது இவர் வாய்மூடிநின்று மற்றொருகால் வேறொருவர் எழுத வருவர். இதுவே பழக்கமிவர்களுக்கு.

84. (24) விமர்சத்தில் (பாரா 48-ல்) "பிள்ளை லோகாசார்ய திவ்ய ஸூக்திகளில் சில பலவற்றை தேசிகன் அநுவதித்து ஒரு ரஹஸ்யத்தில் மறுப்பெழுதுகிறார்; மற்றொரு ரஹஸ்யத்தில் (முன்பு மறுப்பெழுதினதற்கு அநுஸரித்து) அவற்றுக்கு அபிப்ராயவர்ணநம்

செய்தருளுகிறார்” என்றொரு விஷயம் தேவரீர் எழுதியிருக்கிறது. (அதே பாராவில்) “தேசிகன் தம்முடைய ஒரு ரஹஸ்யத்தில் தாம் மறுத்த அர்த்தத்தையே மற்றொரு ரஹஸ்யத்தில் ஆச்ரித்து எழுதுகிறார்” என்றும் எழுதியிருக்கிறது. இதெல்லாம் பாமரப்ரதாரணமே யொழிய உண்மையாயிருக்க ப்ரஸக்தியே கிடையாது. உண்மையாயிருந்தால் ஸ்ரீ தேசிக ரஹஸ்யங்களிலிருந்து ஸ்தல விசேஷங்களை யெடுத்துக் காட்டவேணும்—என்று சிலர் க்ஷேபித்தார்கள். இவை யெல்லாம் தேவரீருடைய பல நூல்களிலே விசதமாயிருக்கையாலே அநாயாஸமாக எடுத்துக் காட்டினேன்;—ப்ரபத்தியை அதிகாரி விசேஷணமாகவும் அநுமதி மாத்ரமாகவும் சித்தஸமாதாநார்த்தமாகவும் சைதந்யக்ருத்யமாகவும் பிள்ளை லோகாசார்யர் அருளிச் செய்தவற்றை ரஹஸ்யத்ரயஸார சரமச்லோகாதிகாரத்தில் மறுத்திருக்கு மிடங்களை யெடுத்துக் காட்டினேன் [“வ்ரஜ என்று விதேயமாய்” இத்யாதி பங்க்திகளை யெடுத்துக் காட்டினேன்; இனி, அடுத்த ஸாரஸார மென்கிற ரஹஸ்யத்தில் சரமச்லோகாதிகாரத்தில்— “இப்படி விதேயமான ப்ரபதநத்தை சிலர் அதிகாரி விசேஷணம், ஸம்பந்தஜ்ஞாநமாத்ரம், ஸித்தோபாயப்ரதிபத்திமாத்ரம், அநிவாரணமாத்ரம், அநுமதிமாத்ரம், அசித்வ்யாவ்ருத்திமாத்ரம், சைதந்யக்ருத்யம், சித்தஸமாதாநம் என்றாப்போலே சொல்லுமது இவ்விதிக்கும் இத்தை விவரிக்கிற சாஸ்த்ரங்களுக்கும் இவற்றுக்குச் சேர்ந்த உபபத்திகளுக்கும் பாஷ்ய ஸூக்த்யாதிகளுக்கும் நிபுணஸம்ப்ரதாயங்களுக்கும் அநுகுணமாக வேண்டுகையாலே * நானே நானாவித நரகம்புகும்பாவம் செய்தேனென்று நிற்கிற நம்மை ஈச்வரன் ரக்ஷிக்கிறவிடத்தில் * வந்தடைந்தேனென்று நாம் பண்ணுகிற அல்பமான வசீகரணயத்நம் * அதுவுமவனதின்னருளே * * இசைவித்தென்னை * இத்யாதிகளிற்படியே அவன்தானே காட்டி ப்ரவர்த்திப்பித்ததொரு வ்யாஜமாத்ரமன்றோவென்று ஸித்தோபாய ப்ராதாந்யாநுஸந்தானத்தில் அவர்களுக்கு தாத்பர்யம்” என்றெழுதப் பட்டுள்ளதை எடுத்துக் காட்டினேன். மற்றோரிடமும் காட்டினேன்—விரோதபரிஹார ரஹஸ்யத்தில் மூலமந்த்ராதிகாரத்தில்—“பக்திபோலே ப்ரபத்தியும் சோதிதமான உபாயமாய் நின்றது; இது பகவத் ப்ரஸாதவ்யவஹிதமாகையாலே ஸாக்ஷாத் பலஹேதுவன்று என்னுமிடமும் வ்யாஜமாத்ர மென்னுமிடமும் பக்த்யாதிகளுக்கும் துல்யமாயிருந்தது. இப்படியிருக்க, ப்ரபத்தியை உபாயமன்றென்று விசேஷித்துச் சொல்லுகிறவர்களுக்கு தாத்பர்யமென்னென்னில்; சாஸ்த்ரங்கள் பக்தியைப் போலே ப்ரபத்தியையும் உபாயமாக விதிக்கச்செய்தேயும் இவ்வுபாயத்தினுடைய அநுஷ்டாந சரீரத்தைப் பார்த்தால் பரந்யாஸ ப்ரதாநமாய் நீயே உபாயமாக வேண்டுமென்று அபேக்ஷிக்கிறபடியே பரஸ்வீகாரம் பண்ணிக்கொண்டு உபாயாந்தரஸ்தானத்திலே நிற்கிற ஈச்வரனுடைய நிரபேக்ஷோபாயத்வம் இவ்வித்யைக்கு வேத்யாகாரமாய் நிற்கையாலே வித்யாந்தரங்களிற்காட்டில் இவ்வாசியைப்பற்ற ப்ரபத்தியை விசேஷித்து உபாயமன்றென்றார்கள்.’—என்றுள்ளதையும் காட்டினேன். ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸித்தோபாய சோதநாதிகாரத்தின் முடிவில்—“ப்ரஸாதநஸ்யோபாயத்வே சாஸ்த்ரீயேபி பலம் ப்ரதி, கர்த்ருத்வாவ்யவதாநாத்யைஸ் ஸித்தோபாய ப்ரதாநதா; ப்ரபத்தேர் லக்ஷணே மந்த்ரே விதௌ வாக்யாந்தரேஷு ச, பாஷ்யாதௌ ஸம்ப்ரதாயே ச உபாயத்வம் ப்ரஹ்மணி ஸ்திதம்.” என்று உண்மை விளக்கப்பட்டிருப்பதையு மெடுத்துக் காட்டினேன்.

85. “சரமச்லோகத்தில் ‘மாமேகம்’ என்ற விடத்தில் ஏகசப்தத்தினால் ஸ்வீகாரத்தில் [ப்ரபத்தியில்] உபாயத்வம் தவிர்க்கப்படுகிறதென்று முமுக்ஷுப்படியில் பிள்ளைலோகாசார்யர் ஸாதிக்கிறார். நவீநர்கள் இதை ப்ரபலமாக ஆக்ஷேபிக்கிறார்கள். ஏகசப்தமானது,

தேவதாந்தரங்களைப் பற்றாமல் என்னை மாத்திரம் பற்று என்று காட்டுமேயொழிய உபாயமாக விதிக்கப்பட்ட ப்ரபத்தியில் உபாயத்வத்தை எப்படி தவிர்க்கும்? என்று வலிதாக ஆக்ஷேபிக்கிறார்கள். ரஹஸ்யத்ரயஸாரத்திலும் இவ்வாக்ஷேபமுள்ளது. ரஹஸ்யத்ரயசுளகத்தில் சரமச்லோகாதிகாரத்தில் ஏகம் என்கிற பதத்திற்கு மூன்று நிர்வாஹங்கள் காட்டுகிறார். "ஏகசப்தம்—ப்ரபத்தியின் கர்த்தாவான தன்பக்கலிலும், தன் க்ரியையான ப்ரபத்தியிலும் பிறக்கும் ப்ராதாந்ய புத்தியை பராதீநத்வாதிகளாலே கழிக்கிறது" என்பது மத்யஸ்த நிர்வாஹமாகக் காட்டப்பட்டது. ஸாரஸாரத்திலும் ஏகசப்தார்த்த விவரணத்தில் இங்ஙனமேயுள்ளது. விரோதபரிஹாரமென்கிற ரஹஸ்யத்தில் (92) லக்கமுள்ள விரோதபரிஹாரமாவது—'இங்கு வ்ரஜ என்று ப்ரபத்தியை உபாயமாக விதியாநிற்க 'மாமேகம் சரணம்' என்றும் 'ததேகோபாயதாயாச்ஞா' என்றும் 'த்வமேவோபாயபூதோ மே' என்றும் சொல்லுகை கூடுமோ வென்னில், ப்ரதாநமான ஸித்தோபாயம் ஸஹஜகாருண்யாதி விசிஷ்டனாய்க்கொண்டு பரஸ்வீகாரம்பண்ணி நிற்கிறவன் ஒருவனுமேயாகையாலும் அவனுடைய வசீகரணார்த்தமாக விதிக்கப்படுகிற வ்யாஜமாத்ரமான ஸாத்யோபாயத்தில் ப்ராதாந்யவிவக்ஷை பண்ணுகை உசிதமல்லாமையாலும் இப்படி வ்யபதேசிக்க விரோதமில்லை"—என்பது. இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளினால் பிள்ளைலோகாசார்யருடைய ஸித்தாந்தந்தான் தேசிகனுடைய ஸித்தாந்தமாக நிகமிக்கப் படுகிறதென்றும் நிரூபித்தேன். ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில் "ஸ்ரீவிஷ்ணுசித்தவாதிஹம்ஸாம்புவாஹ வரதாசார்யாதிகள் ஸங்க்ரஹித்தார்கள்" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. இதில் விஷ்ணுசித்தரென்றது எங்களாழ்வானை; வாதிஹம்ஸாம்புவாஹரென்றது ஸ்வாசார்யரான கிடாம்பியப்புள்ளாரை. இவர்க்குப் பிறகு வரதாசார்யரென்றது யாரை? என்று விமர்சிக்கவேணும். நடாதூரம்மாளுக்கு வரதாசார்யரென்று திருநாமமுண்டாகையாலே அவர் விவக்ஷிதராயிருக்கலாமென்னில், எங்களாழ்வானுக்கு சிஷ்யரும், வாதிஹம் ஸாம்புவாஹர்க்கு ஆசார்யருமான அவரை நிர்தேசிக்க வேண்டிய ஸ்தானத்தில் நிர்தேசியாமல் அஸ்தானத்தில் நிர்தேசிப்பது அஸமஞ்ஜஸமாகும். தவிரவும், ஸமாஸத்தில் * அல்பாச் தரம் பூர்வம் * என்ற வ்யாகரணாநுசாஸநப்படி 'விஷ்ணுசித்த வரதாசார்ய வாதிஹம்ஸாம்புவாஹ' என்றே சொல்லவேணும். அப்படி சொல்லாமல் வாதிஹம்ஸாம்புவாஹர்க்குப் பிறகு வரதாசார்யரென்றது யாரை? என்று விமர்சிக்கவேணும். 'இந்த வரதாசார்யர் நடாதூரம்மாளல்லர்' என்பது நிச்சிதம். ஸ்ரீரங்கத்தில் ஒரு ஆசார்யரிடத்தில் தேசிகன் ரஹஸ்யார்த்த சிக்ஷைபெற்றது அவருடைய உக்தியினாலேயே அப்ரகப்ய மாயிரா நின்றது. ரஹஸ்ய மாத்ருகை யென்னும் ரஹஸ்யத்தின் முடிவில் "விசுத்த தேசிகவதா" என்றதையு மெடுத்துக் காட்டினேன். அதில் ஆரம்பத்தையும் காட்டினேன்.

85. இப்படியாக மஹாவிவேகிகளான மஹான்கள் எழுதியனுப்பியிருக்கும் ஸ்ரீமுகங்கள் காட்டிலெரித்த நிலாவாகப் போய்விடுகின்றனவேயென வருந்தி ஏகதேசம் இங்கு வெளியிட்டோமித்தனை. இவ்வண்ணமெழுதியனுப்பின ஸ்வாமிகளின் திருநாமங்களை நாம் வெளியிட விரும்புகின்றிலோமென்று தெரிவித்திருந்தாலும், ப்ரசண்டபண்டிதரும் மஹாநிருபகருமான ஸ்ரீமத் காளி ரங்காசார்யஸ்வாமியின் திருநாமத்தை வெளியிட்டாயிற்று. ஸ்ரீமத். வானமாமலைமடம் ஆஸ்தான வித்வான் ஏ. கோபாலையங்கார் ஸ்வாமி ஸம்ஸ்க்ருதத்திலேயே மிக அற்புதமாக எழுதியுள்ளார். கோயம்புத்தூர் ஸ்ரீமதுபயவே. வேதவ்யாஸபட்டர்ஸ்வாமியும், தியாகராயநகர். ராவ்ஸாஹிப். S. ராகவையங்கார் ஸ்வாமியும் ஒரு க்ரந்தம்போலவே எழுதியனுப்பியிருக்கிறார்கள். S. ராகவையங்கார் ஸ்வாமி உயர்ந்த அதிகாரபதவியிலிருந்து பல ஜட்ஜ்மெண்டுகள் எழுதின மஹாமேதாவியாதலால் அவருடைய மிகச் சிறந்த ஸ்ரீமுகம் பெரிய ஜட்ஜ்மெண்டு போலவே அடியேனுக்குத் தோன்றியது. இந்த அநுவாதங்களை இவ்வளவோடு நிறுத்திக்கொள்ளுகிறேனிப்போது.

— உபஸம்ஹாரம். —

86. கீழ் முதலாஹ்னிகத்தில் (பாரா 52 ல்) ஆள்தாவிக்கப்பட்ட ஸ்ரீமதுபயவே மதுராந்தகம் வீரராகவாசார்ய ஸ்வாமி அங்கு நிர்திஷ்டமான தமது முகவுரையில் ஸ்ரீ கோபால தேசிகனுடைய க்ருதிகளில் இந்த தேசிக ஸஹஸ்ரநாமத்தையும் சேர்த்துப் படித் திருக்கையாலே அப்பெரியாரும் இதை கோபால தேசிக க்ருதியாகவே கருதியிருப்பதாக விளங்குகின்றது. அந்த ஸ்வாமி இந்த விமர்சத்தை விமர்சத்துடன் கடாக்ஷித்தருளினல் 'அந்த ஸஹஸ்ரநாமஸ்துதி இதுவன்று; வேறு' என்றே ஸாதிப்பர். அன்றி, இதுவே தானென்று ஸாதிப்பரேல் அதை உபபத்திகளுடன் ஸாதிப்பது நலம். இதற்குத் தாமொரு வியாக்கியானமியற்றி வெளியிட்டால் உலகுக்கு மஹோபகாரம் செய்ததாகும். எம்பெருமானைப் பற்றி ஒரு ச்லோகமுண்டு; * ஸம்வத்ஸரேண யதி வா ப்ருவதே ஸஹஸ்ரம் ஸாதீன் ஜநஸ்ய ஸுகதாந் ஸததம் குணாம்ஸ்தே* என்று. இந்த ச்லோகத்தை ஸ்ரீமதுபயவே, வானமாமலை வித்வான் கோபாலையங்கார் ஸ்வாமி * ஸம்வத்ஸரேண யதி வா ... ஸஹஸ்ரநாமஸ்துதி ... * என்று ஆக்ருத ஸஹஸ்ரநாமஸ்துதி விஷயத்திலே யோஜிக்கவேணு மென்று தெரிவித்தருளினர். வித்வான்களின் ஸித்தாந்தம் இதுவேயாகும்.

87. இந்த ஸஹஸ்ரநாமஸ்துதியை முத்ரணம் செய்வித்தவர், (அல்லது) இதற்கு முகவுரை எழுதிக்கொடுத்தவர் விஷயத்தில் கீழே (பாரா 4ல்) நாமெழுதியிருப்பது தத்துவம். ஒரு சிறுவிஷயம் கேண்மின். உலகத்தில் காகிதம் என்கிற வொரு சொல்லும் கடிதம் என்கிற வொரு சொல்லும் வழங்கிவருவதுண்டு. இவையிரண்டும் பர்யாயபதங்களல்ல. எழுத வேண்டிய பத்ரிகை காகிதமெனப்படும். எழுதி, பிறர்களிடம் சேரவேண்டியதற்காக ஒட்டப்பட்ட பத்ரிகை கடிதமெனப்படும். வடிதழ என்கிற ஸம்ஸ்க்ருதபதமே கடிதமெனத் திரிந்தது. இது சிறுவர்களுமறிந்த விஷயம். முகவுரைகாரர், (முகவுரையில்) *நிச்சேஷம் அம்பரதலம் யதி பத்ரிகா ஸ்யாத்* என்கிற பாதுகா ஸஹஸ்ரஸூக்தியை யுதாஹரித்து பத்ரிகா என்பதற்குப் பொருளாகக் கடிதமென்றெழுதுகிறார். தேசிகன் கீதார்த்த ஸங்க்ரஹச்சுருக்கு என்றொரு பிரபந்தம் பாடியிருப்பதாக எழுதுகிறார். திருமந்திரச் சுருக்கு, துயச்சுருக்கு, சரமச்லோகச்சுருக்கு இவைபோல் கீதார்த்தஸங்க்ரஹச் சுருக்கு என்றொரு பிரபந்தமு மிருப்பதாகக் கருதியுள்ளார். ஸங்க்ரஹம் என்பதற்குச் சுருக்கென்று பொருள். ஸ்வாமி கீதார்த்த சங்கிரகமென்கிற பிரபந்தம் ஸாதித்திருக்கிறாரேயொழிய சங்கிரகச்சுருக்கென்று ஒரு பிரபந்தம் ஸாதித்திருக்கவில்லை. இவற்றையெல்லாம் நம் திருக்குடந்தை கண்ணன் அறியாதவரல்லர். ஆகவே அவர் விவாதமுகவுரையில் ஸம்பந்தப்பட்டிராதவரென்று எமது உறுதி.

ஸ்ரீ || ... 
நிவேதகி ... ... ... க்ஷணே ந |
ஜதி நிஜ ... ... தாஜேஷு ஜமோயம்
ஸுவநக ... ... வ்ருதேவீக ||

ஸ்ரீ காஞ்சீ. ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியரியற்றிய நூல்களுள்
நானூற்றெழுபத்தோன்பதாவதான
**தேசிக ஸஹஸ்ரநாம விமர்சம்**
முற்றிற்று.